## ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 19 || கீலக ஸ்ரீ புரட்டாசித் திங்கள் 1-ம் உ [17-9-68] || இதழ்-9

# வேளிமலைக்குமாரகோயில்

திரு. சி. பத்மநாபன் அவர்கள்,
STATE BANK OF INDIA,
SRIVAIKUNTAM.

---

"முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரிய" சிலம்பு முருக வேளின் சிறப்பிடங்களாக பாண்டிநாட்டுச் செந்தில், கொங்கு நாட்டுச் செங்கோடு, சோழநாட்டு வெண்குன்று, சேரநாட்டு திருவேரகம் என்ற நான்கையும் குறிப்பிடுகிறது. அம்முருக வேளின் அருள்பெற்று அத்திருவருளை பிறரும் பெறுதல் வேண்டும் என்னும் நோக்குடன் முருகனிடத்தே ஆற்றுப் படுத்துவதாக அமைந்த நக்கீரரின் திருமுருகாற்றுப்படையில் அவனுக்கு உரியவையென்று ஆறுபடை வீடுகள் குறிப்பிடப் பட்டுள்ளன. திருப்பரங்குன்றத்தில் சூரனைவென்ற வெற்றி யைக் காணலாம். திருச்சிரலைவாயில் ஆறுமுகங்களையும் பன் னிருகைகளையும் காண்கிறோம். திருவாவினன்குடியில் முனி

வர்கள் உண்ணுநோன்பு இருந்து எலும்பும்தோலுமாகக் காட்சிதருகின்றனர். திருவேரகத்தில் மறைமுழக்கம் கேட்கின்றது. அங்கு வழிபடும் அந்தணர் இயல்பை வேறு எங்கும் காணமுடியாது. அடுத்த பகுதியில் குறிஞ்சித்தலைவன் குன்றுதோறும் ஆடுதலைக் காண்கிறோம். ஆறும் பகுதியாகிய பழமுதிர்ச்சோலை முருகவேள்விரும்பும் விழாக்களமாகத் திகழ்கிறது. இவ்வாறு நக்கிரர் முருகனின் ஆறுபடை வீடுகளை நமக்குப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

இளங்கோவடிகளும் நக்கிரரும் நமக்குக் காட்டும் இடங்களுள் செந்திலும் திருவேரகமும் பொதுவாக அமைந்துள்ளன. திருவேரகம் என்பது தஞ்சைமாவட்டத்திலுள்ள சுவாமி மலை என்பர். ஆனால் தமிழகத்தின் தென்பகுதியான நாஞ்சில் நாட்டில் அமைந்துள்ள வேளிமலைதான் திருவேரகம் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. மேலும் வேலவன் வேடனாகவும் விருத்தனாகவும் வந்து வள்ளியம்மையாரை மணமுடித்ததும் இந்த மலையிலேதான் என்பதற்கும் பல ஆதாரங்கள் கிடைக்கின்றன.

"சீர்கெழு செந்திலும், செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன் கைவேலன்றே" என்ற சிலப்பதிகாரக் குன்றக்குரவை கூறும் வேலவனின் நான்கு இடங்களுள் வெண்குன்றை சுவாமி மலை எனக்கூறி திருவேரகம் மலை நாட்டகத்தொரு திருப்பதிகளில் ஒன்று என்ற நச்சினார்க்கினியர் கூற்றையும் எடுத்தாள்கிறார் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார். மேலும் "ஏரகத்துறைதலுமுரியன்" (முருகு. 189) என்ற விடத்து ஏரகம் மலை நாட்டகத்தொரு திருப்பதி என எடுத்துரைக்கிறார் நச்சினார்க்கினியர். இவற்றிலிருந்து வெண்குன்றே சுவாமி மலையென்றும் திருவேரகமும் வெண்குன்றும் வேறு வேறு திருப்பதிகள் என்றும் திருவேரகம் என்பது சுவாமி மலை அல்ல என்றும் தெளிவாகத் தெரிகின்றது.

பதினைந்தாம் நூற்றாண்டில் தோன்றிய அருணகிரிநாதர் சேரநாட்டை ஒதுக்கிவைத்து "குடகாவிரிக்கு வடபாலார்

திருவேரகம்'' என மலை மண்டலத்துத் திருப்பதியை சோழ மண்டலத்திற்குக் கொண்டு சென்றார். தஞ்சை மாவட்டத்திலுள்ள சுவாமி மலை இயற்கையால் அமைந்த மலையன்று. செயற்கையாக அமைக்கப்பட்ட குன்றின் மேல்தான் சுவாமி நாதர் கோயில் அமைந்துள்ளது.

வேளிமலைக்குமாரகோயில் நாகர்கோயிலிலிருந்து பத்து மைல் வடக்கே இயற்கையாக அமைந்த மலையின் அடிவாரத்தில் சிறப்புடன் விளங்குகின்றது. இக்கோயிலைச் சூழ்ந்துள்ள பச்சைபசேலென வயல்களும் ஓங்கி வளர்ந்த தென்னைமரங்களும் இயற்கையான மலைகளும், காண்போர் மனத்தைக் கவர்கின்றன. இவ்வாறு இயற்கையன்னை களிநடம் புரியும் வேளிமலைதான் செவ்வேள் குமரனின் நான்காவது படை வீடான திருவேரகம்.

திரு ஏர் அகம் என்ற சொற்கள் சேர்ந்து திருவேரகம் என்றாயிற்று. நாஞ்சில் நாட்டின் மறு பெயர்தான் திருவேரகம். நாஞ்சிலும் ஏரும் ஒரே பொருள் குறிக்கும் இரு சொற்கள். ஏரினாலாகிய உழவுத்தொழில் மிகுந்த இடமான நஞ்சை கொழிக்கும் நாஞ்சில் நாட்டில் அமைந்துள்ள வேளி மலையைத்தான் இளங்கோவடிகளும் நக்கீரரும் ஏரகம் என அழகுறக் கூறியுள்ளனர்.

தமிழகத்தின் தென் பகுதியாகக் குறுகிக்கிடக்கும் நாஞ்சில்நாடு முன்பு மலை நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது. இந்நாடு நாஞ்சில் வள்ளுவன் ஒருவனால் ஆளப்பட்டு வந்துள்ளது என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க காலத்துப்பாடற்றொகையான புறநானூற்றில் நமக்குச் செய்திகள் கிடைக்கின்றன. நாஞ்சில் வள்ளுவன் ஒரு சிறைப் பெரியனார் (புறம். 137) மருதன் இளநாகனார் (புறம் 138, 139) ஔவையார் (புறம். 140) கருவூர் கதப்பிள்ளை (புறம். 380) என்னும் புலவர்களால் பாராட்டப்பட்டவன். இவ்வாறு புலவர்கள் ஏத்தும் வள்ளுவனை ஆட்சித் தலைவனாகக் கொண்ட நாஞ்சில்நாட்டின் எல்லையை அழகியபாண்டியபுரம் பெரிய முதலியார் வீட்டு ஓலைப்பிரமாணங்கள், ''மங்கலம்

முதல் மணக்குடிவரை'' எனக்குறிப்பிடுகிறது. மங்கலமென்பது விளவங்கோடு தாலுகாவில் உள்ள ஒரு சிற்றூர். வள்ளுவன் கோடே விளவங்கோடாகத்திரிந்தது என்பர். கோடு என்பது மலை. இம்மாவட்டம் மலையும் மலைசார்ந்த இடமுமாக இருப்பதால் கட்டிமாங்கோடு, மேலாங்கோடு, திக்கணங்கோடு, திருவிடைக்கோடு, இடைக்கோடு, தேவிக்கோடு, பன்றிக்கோடு, வெள்ளிக்கோடு போன்று கோடு என்னும் சொல்லை ஈற்றாகக் கொண்ட பல ஊர்களை இங்கு காணலாம்.

வேளிமலை மலை நாட்டகத்தொரு பகுதியென அங்கிருந்து மூன்று மைல் வடமேற்கே உள்ள கேரளபுரத்திலே ''மலைமண்டலத்து செங்கழுனிர்வள நாட்டில் நயினர் முத்தளக்குறிச்சியான ஸ்ரீ வீரகெரளபுரத்துக் கோயிலில் .... ....'' என வரும் கல்வெட்டும் அதனை அடுத்துள்ள திருவிதாங்கோட்டில் கிடைத்த ''மலைமண்டலத்து திருவிதாங்கோட்டு இரவிவன்மராய குலசேகரப் பெருமாள் பெருந்தெருவில் செட்டு வேலாயுதப்பெருமாள் .... ...'' என்ற கல்வெட்டுத் தொடரும் வேளிமலையிலிருந்து பத்துமைல் வடகிழக்கே உள்ள திருநந்திக்கரையில் அகப்பட்ட ''இராஜாதித்ததேவர் பெரும்படைநாயகர் மலைநாட்டு நந்திக்கரைபுதூர் வல்லன் குமாரன் ... ... ...'' என்ற தொடரும் தெரிவிக்கின்றன. (ஆதாரம் திருவிதாங்கூர் தொல்பொருள் ஆராய்ச்சித் தொகுப்பு வெளியீடுகள் பகுதி 4 பக்கம் 154, பகுதி. 5 பக்கம் 116. பகுதி 1. பக்கம் 291)

திருவேரகத்தில் வழிபடுபவர்களை நக்கீரர் ''புலராக் காழகம் புலரஉடீஇ உச்சி கூப்பியகையினர்'' என்று கூறுகிறார். அவரது கூற்றுக்கு ஏற்றாற்போல காலைப்பொழுதில் ஆடவரும் பெண்டிரும் நீராடி நனைந்த உடையானது உடம்பிலே தோய்ந்து உலரும்படியாக உடுத்து இருகைகளையும் தலைமேல் குவித்து வேளிமலைக்குமரனை வழிபடுகின்றனர். இச்சிறப்பை வேறு எந்த படைவீட்டிலும் காணமுடியாது. எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் குறிப்பாக தமிழ்மாத கடைசி

வெள்ளிக்கிழமைகளில் (ஒடுக்கத்து வெள்ளிக்கிழமை) இங்கு வந்து வணங்கும் முருகபக்தர்கள் ஏராளம். கேரளநாட்டு மக்கள் வேளிமலைக்குமரனைத் தங்கள் குலதெய்வமாகக் கொண்டு வழிபடுகின்றனர். குமரனின் திருவடியிலே மலர் களை இட்டு வணங்குகின்றனர். அவ்வழிபாட்டை பெரிதும் உவந்துஏற்று அவ்வூரிலேயே முருகப்பெருமான் எழுந்தருளி யிருக்கிறார். இதைத்தான் நக்கீரர் ''விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதவந்து ஏரகத்துறைதலும் உரியன்'' என்றார். வேளி மலைக்குமாரகோயிலிலே நடைபெறும் புஷ்பாபிஷேகம் மிகவும் பிரசித்திபெற்றது.

இங்குள்ள அர்ச்சகர்களை நக்கீரர் உயர்குடியில் தோன்றி நாற்பத்தெட்டாண்டுகள் பிரமச்சரியங்காத்து அறங்கூறும் கொள்கையும் நாடோறும் முத்தீயோம்பும் முறைமையும் உடைய இருபிறப்பாளராகிய வேதியராவர் என்றார். இவ் வட்டாரத்திலுள்ள திருவட்டாறு ஆதிகேசவப் பெருமாள் கோயிலிலும் திருவனந்தபுரம் பத்மநாபசுவாமிகோயிலிலும் பூஜை செய்யும் அர்ச்சகர்கள் கோயிலைவிட்டு சில ஆண்டுகள் வெளியே செல்லக் கூடாது என்ற கடுமையான சட்டதிட் டத்திற்கு உட்பட்டு தங்கள் வாழ்வை தெய்வப்பணிக்கே அர்ப்பணித்துள்ளதை நாம் இன்றும் காணலாம்.

இனி வேளிமலைக்குமாரகோயிலினுள் நுழையலாம். மலையின் அடிவாரத்திலிருந்து 38 படிகள் ஏறிச்சென்றால் கோயிலை அடையலாம். முகமண்டபத்தின் இரு புறமும் வீரபாகுவும் வீரமகேந்திரரும் நிற்கின்றனர். வீரபாகுவை அடுத்து வள்ளியம்மையை மணமுடிக்க உதவிய கலியாண விநாயகர் அமர்ந்துள்ளார். எட்டடி எட்டு அங்குலம் உயர முள்ள மூலவர் முருகன், இங்கு வரகஹஸ்தத்தில் நின்றருளு கின்றார். அவரது இடது பக்கத்தில் நிற்கும் வள்ளியம்மை யாரின் உயரம் ஆறு அடி இரண்டு அங்குலம். இங்கு காணும் முருகன், வள்ளி உருவச்சிலைகளைப்போன்று வேறு எங்கும் காணமுடியாது. திருப்பரங்குன்றத்தில் தெய்வயானை யம்மை யாரைத் திருமணம் செய்து கொள்ளும் தோற்றத்தில் காட்சி

யளிப்பதுபோல் இங்கு வள்ளியம்மையாருடன் வேலவன் காட்சிதருகிறார். முதல் பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் இளையவராகவும் வடமேற்கு மூலையில் மணவிடகுமாரராகவும் முருகவேளைக்காணலாம். மூலவரை அடுத்து நந்தியோடு கூடிய சிவனது சன்னதி கிழக்கு நோக்கி உள்ளது. ஆறுமுக நயினாரும் நடராஜரும் தெற்குநோக்கி நிற்கின்றனர். வேங்கை மரத்திற்காக அமைந்த தனிச்சன்னதியும் தெற்கு நோக்கியே உள்ளது. இம்மரம்தான் இத்திருக்கோயிலின் ஸ்தலவிருக்ஷம். "வேங்கையின் உருவமாகி வேற்படைவீரன் நின்ற" இடம் தான் வேங்கைமர சன்னதி என்பர். மேலும் நடராஜரும் வேங்கைமர சன்னதியும் அடுத்திருப்பது "வேங்கை உரித்த பரம்பரன் மாமகன் வேங்கையுருக்கொளவே" எனவரும் கந்தபுராணத்து அடிகளை நமக்கு நினைவூட்டுகின்றது.

கோயிலிலிருந்து இரண்டு மைல் தொலைவில் மலையின் மேல் கலியாணமண்டபம் உள்ளது. வள்ளியம்மையின் திரு வுருவத்தைக்கொண்டுள்ள ஒரு குகைக்கோயிலையும் அங்கு காணலாம். அதனை அடுத்து தினைப்புனம், வள்ளிச்சோலை, வட்டச்சோலை, கிழவன்சோலை என்றழைக்கப்படும்இடங்கள் உள்ளன. இவையெல்லாம் வேளிமலைக்குமார கோயில் தேவஸ்தானத்திற்கே உரியது. இத்திருக்கோயிலில் நடை பெறும் திருவிழாக்களில் சிறந்து விளங்குவது வள்ளியம்மை யாரின் திருக்கலியாணம்தான். அந்நாளிலே முருகப்பெருமான் மலைமேலே எழுந்தருளி வள்ளியை அழைத்துவர அதுகண்ட குறவர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்திப்போர்புரியும் காட்சி காணத்தக்கது. இப்போர் நடைபெறும் இடம் "குறவர்படு களம்" என்றழைக்கப்படுகிறது. இப்போர் நிகழ்ச்சிக்காக அம்மலைப் பகுதிகளில் வாழும்குறவர் இனத்தவர்களே கலந்து கொள்வர். அவர்களுக்கு தேவஸ்தானத்திலிருந்து ஆண்டு தோறும் "படித்தரம்" அளிக்கப்படுகிறது.

முருகப்பெருமானுக்குக் காதல் வேள்வி நடந்த இட மானதால் இவ்விடம் வேள்விமலை என்றழைக்கப்பட்டு அதுவே நாட்பட வேளிமலையாயிற்று என்று கருத இடமிருக் கிறது. இம்மலையைத்தான் திருக்கூடராசப்பக் கவிராயர்

தனது குற்ருலக்குறவஞ்சியில் ''நாஞ்சில் நாட்டு வேள்விமலை யம்மே'' எனக் குறிப்படுகிருர். அதனைத் தொடர்ந்து ஐங் கரன் யானையாக வந்து வள்ளியை பயமுறுத்திய விளையாட்டு களையும் தினைப்புனத்தில் வேங்கைமரமாக மாறியதையும், வேலவன் வள்ளியம்மையை மணமுடித்ததையும்

''வெருவிவருந்தினைப்புனத்திற்பெருமிருகம் விலக்கி
வேங்கையாய் வெயில்மறைத்தபாங்குதனைக் குறித்தே
அருளிலஞ்சி வேலர்தமக்கொரு பெண்ணைக்கொடுத்தோம்
ஆதினத்து மலைகளெல்லாம் சீதனமாகக் கொடுத்தோம்''

என அழகுறக் கூறியுள்ளார். வேளி மலை வட்டாரத்தில் யானைக் கூட்டங்களை இன்றும் காணலாம்.

கந்தபுராணத்திலே ''இவ்வரையில் குமரிதீதற ஆடுறவந் தனம்'' என்று குமரித்தீர்த்தத்தின்கண் பாவம் நீங்க நீராடி- என்றும் கன்னியோடு துயர்நீங்கி இன்பமுற என்ற பொரு ளும் தொனிக்க வள்ளியை நோக்கி விருத்தன் கூறிப்பிட்டது குமரியம்பெருந்துறையிலிருந்து இருபது மைல் வடக்கிலி லுள்ள வேளிமலைதான் என்பதே மிகவும் பொருந்தும். வேளி மலைக்குமரனுக்கு தேனும் தினைமாவும் முக்கியமாகப் படைக் கப்படும் நிகழ்ச்சியும் இங்கு குறிப்பிடத்தக்கது.

நாஞ்சில் வள்ளுவனை நாஞ்சில் குறவன் என்றழைப்பர். நாஞ்சில் குறவனைப்பற்றி குறிப்பாக கோணங்கிக் குறவனைப் பற்றிய சிலசெய்திகள் நாகமையாவின் திருவிதாங்கூர் சரிதத் தில் கிடைக்கின்றன. அழகியபாண்டிபுரத்தின் பக்கத்தில் குறத்தியறை என்ற ஊர் இருப்பதையும் அங்கே குறவன் தட் டுவிளை என்ற நிலப்பகுதி இருப்பதையும் அது குறிப்பிடுகிறது. குறவன் குறத்தி வாழ்க்கையை வைத்து பின்னப்பட்டதிருக் குற்ருலக் குறவஞ்சிதோன்றியது நெல்லை மாவட்டத்திலே தான். மேலும் நெல்லை மாவட்டத்துக்கோயில்களில் குறவன் குறத்தி சிலைகள் ஓர் முக்கியமான இடத்தைப்பெற்றுள்ளன. கிருஷ்ணபுரத்து குறவன் குறத்தி சிலைகள் உலகப்பிரசித்தி பெற்றவை. இவற்றை நோக்கும்போது நாஞ்சில் நாட்டிலும் அதை அடுத்துள்ள நெல்லைமாவட்டத்தின் தென் பகுதியிலும்

ஒரு காலத்தில் குறவர்களின் ஆதிக்கம் சிறப்புற்று ஓங்கி யிருந்தது என்று தெரியவருகிறது.

நெல்லை மாவட்டத்துத் திருக்குறுங்குடியில் வள்ளிநாச்சியார் தோன்றினர்என்றும் அப்பகுதியை ஆண்ட நம்பிராயன் என்ற வேடர் தலைவனால் வளர்க்கப்பட்டார் என்றும் தமிழ் நாடு அரசாங்க அறநிலையத்துறையினரால் வெளியிடப்பட்ட "நெல்லைமாவட்டக்கோயில் வரலாற்றி"லிருந்து அறியலாம். (பக்கம் 217). வள்ளியூரும் நம்பித்தலைவன்பட்டயம் என்ற சிற்றூரும் இவ்வட்டாரத்திலே ஓடுகின்ற நம்பியாறும் இதனை உறுதிப்படுத்துகின்றது. நாஞ்சில் குறவர்களும் நம்பிராயனும் அடுத்தடுத்து வாழ்ந்ததால் அவர்களுக்கிடையே நெருங்கிய தொடர்பு இருந்திருக்க வேண்டும். அத்தொடர்பினால் வள்ளி யம்மையார் தினைப்புனங்காக்க வேளிமலை வந்தடைந்தார் என்றும் அதைத் தொடர்ந்து வள்ளித்திருமணம் அங்கு நடந்திருக்கிறது என்றும் கொள்ளலாம்.

மேற்கூறிய ஆதாரங்களிலிருந்து வேளிமலைக்குமார கோயில்தான் திருவேரகம் என்றும் வேலவன் வள்ளியம்மை யாரை மணமுடித்ததும் இம்மலையிலேதான் என்பதும் விளங்குகின்றது.

---

# சிதம்பர மும்மணிக்கோவை

## உரை நடை

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர்,
பாலகவி
**திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,**
தேவகோட்டை.

*( மலர் 19 இதழ் 8-ன் தொடர்ச்சி )*

செய்தவ வேட மெய்யிற் ருங்கிக்
கைதவ வொழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுண் மன்றிற் றிருநடங் கும்பிட்
டுய்வது கிடைத்தனன் யானே யுய்தற்
கொருபெருந் தவமு முஞற்றில னுஞற்ற
தெளிதினிற் பெற்ற தென்னெனக் கிளப்பிற்
கூடா வொழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின் றெண்டரொடு பயிறலிற்
பூண்டவவ் வேடங் காண்டொறுங் காண்டொறும்
நின்னிலை யென்னிடத் துன்னி யுன்னிப்
பன்ன ளெண்ணக்கின ராகலி னன்னவர்
பாவனை முற்றியப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலு மாகலின்
எவ்விடத் தவருனை யெண்ணினர் நீயுமற்
றவ்விடத் துளையெனற் கையம்வே றின்றே. அதனால்
இருபெருஞ் சுடரு மொருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமோ டெண்வகை யுறுப்பின்
மாபெருங் காயந் தாங்கி யோய்வின்
றருண்முந் துறுத்த வைந்தொழி னடிக்கும்
பரமா னந்தக் கூத்த கருணையொடு
நிலையில் பொருளு நிலையியற் பொருளும்
உலையா மரபி னுளங்கொளப் படுத்திப்
புல்லறி வகற்றி நல்லறிவு கொளீஇ
எம்ம ளேரையு மிடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய் தருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க் குண்டோ பெறத்தகா தனவே.

செய்யப் பெறுவதாகிய நல்ல தவவேடத்தை உடம்பிலே கொண்டு, வஞ்சனையையுடைய தீய ஒழுக்கத்தை உள்ளே வைத்துப் புறந்தோன்ருது மறைத்தும், வடதிசையிலுள்ள மேரு மலே வாய்பிளந்து தோன்றுவதையொத்தத் தெய்வத் திருச்சிற்றம்பலத்தில் நினது திருநடனத்தைக் கும்பிட்டு உய் வதைப் பெற்றேன் யான், அங்ஙனம் உய்தற்கு எந்த ஒரு பெருந்தவத்தையும் நான் செய்யவில்லே. அவ்வாறு செய்யாது எளிமையில் உய்தியைப் பெற்றது எப்படியெனச் சொல்ல முற்பட்டால் கூடாவொழுக்கத்தை மேற்கொண்டிருந்தும், தவவேடங் கொண்டதற்கேற்ப நினது தொண்டரோடு பழகு தலிஞல் அத்தொண்டர்கள் யான் பூண்ட அவ்வேடத்தைக் காணுந்தோறும் காணுந்தோறும் நினது பெருநிலேயை என்னி டத்து வைத்து வைத்துப் பலகாலமும் நோக்கிஞர்கள். ஆகவே அவர்களது பாவனே முற்றுதலேயடைய அந்தப் பாவ கத்தின் பயஞல் யான் மேன்மை பொருந்தப் பெற்றேன் போலும். ஆதலால் அம்மெய்யடியார்கள் எந்த இடத்தில் வைத்து உன்னே எண்ணிஞர்களாயினும் அந்த இடத்தில் நீ உள்ளாய் என்பதற்கு ஐயமில்லே. அதஞல் சூரிய சந்திரர்கள் ஆகிய இரண்டு பெருஞ் சுடர்களும் ஒப்பற்ற பெரிய இய மானனும், வெளி, வளி, தீ, நீர், மண் ஆகிய ஐவகைப் பூதங் களும் என்று சொல்லப்பெறும் எண்வகை உறுப்புக்களே யுடைய மிகப்பெரிய திருமேனியைத் தாங்கி ஓய்வில்லாமல் உயிர்களுக்குத் திருவருளே முன் செலுத்துதற்காகப் படைத் தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந் தொழில்களும் நிகழும்படி நடனம்புரிகின்ற பரமானந்தக் கூத்தனே! கருணேயுடன் இயங்குதிணேயும், நிலேத் திணேயு மாகிய பொருள்களேக் கெடாத மரபுடன் உளங் கொள்ளு மாறு வைத்துப் புல்லறிவை அகற்றி நல்லறிவைக் கொள்ளச் செய்து மிகத்தாழ்ந்த தகுதியிலுள்ள எம்போன்ருரையும் இடித்துரைத்து நன்னெறியில் ஒழுகவைத்துச் செம்மைசெய் தருளத் திருவுருக்கொண்டு வந்த நல்ல தவத்தொண்டர்களது கூட்டத்தைப் பெற்றவர்களுக்குப் பெறத்தகாதன ஏதும் உண்டோ?

(தொடரும்)

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறாந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

( மலர் 19. இதழ் 8-ன் தொடர்ச்சி )

### மனவொடுக்கத்தால் வருவன
### Blessings of the Placid Mind

52. ஒடுங்கி நிலைபெற்ற வுத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே.

The heart of the holy trembleth not in fear,
All passions stilled, it enjoyeth calm unruffled;
Neither is there Death
Nor pain, nor night or day.
Nor fruits of karma to experience;
— That truly is the state of the desire — renounced.

ஐம்புலன்களை அடக்கப்பெற்ற துறவியர் சிந்தை கலங்கார்; மரணபயம் அவருக்கில்லை; துன்பம் என்பதுமில்லை; இரவென்றும் பகலென்று மில்லை; வினைப்பயன்களைத் துய்ப்பது மில்லை - இங்ஙன மாயிருக்கும் துறந்தவர் நிலை.

---

(தொடரும்)

உ
திருச்செந்திலாண்டவன் துணை
ஸ்ரீவைகுண்டம் - அருள்நந்திநகரில்

## ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் ஆர்ட்ஸ் காலேஜ்

## புரவலர் தின விழா

ஓதாதுணர்ந்த தவப்பெரு முனிவராகிய ஆதிகுமர குருபர சுவாமிகள் திருப்பெயரால் நிறுவியுள்ள கலைக்கல்லூரியின் புரவலர் சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தோன்றியருளிய ஆவணி மூலத்திருநாள் 1-9-68 ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் 4 மணி முதல் மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது. மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர், பன்மொழிப்புலவர். டாக்டர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர் அவர்கள், M. A., B.L.M O L., Ph.d , தலைமை தாங்கிப் புரவலர் தினவிழாப் பேருரை நிகழ்த்தினுர்கள்.

ஷை விழா இறைவணக்கம், புரவலர் வணக்கப் பாடல்களுடன் ஆரம்பமாயிற்று. கல்லூரி முதல்வர் உயர்திரு. R. இராசரத்தினம் அவர்களின் வரவேற்புரைக்குப்பின் துணைவேந்தர் டாக்டர். தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர் அவர்கள் புரவலர்தின விழாப் பேருரையாற்றினுர்கள். அவர்கள் தம் பேருரையில் ஸ்ரீலஸ்ரீ புரவலர் சுவாமிகள் அவர்களது அறக்கொடைகளையும், சிறப்பாக இக்கல்லூரி நிறுவிப் புரந்து வருவதையும் பாராட்டிப் பேசியதோடு, இதனை இன்னும் பல வகைகளிலும் பேணி வளர்ப்பது ஆட்சிக்குழுவினர், ஆசிரியர் ஆகியோரது தலையாய பொறுப்பு என்பதைச் சுட்டிக் காட்டி வற்புறுத்தினுர்கள்.

தமிழகத்துச் சான்ருேர்கள் எல்லாப் பொருள்களிலும் இறைவனைக் கண்டதையும், சிறப்பாக உயிர்கள் அனைத்தும் இறைவன் எழுந்தருளியுள்ள நடமாடுங் கோயில்கள் என்பதையும், உயிர்களுக்கும் மக்களினத்துக்கும் தொண்டு செய்வதே சிறந்த தெய்வத் திருத்தொண்டு என்றும், மாணவர்கள் அறிவியல் படிப்போடு இலக்கியப் படிப்பிலும் ஆர்வம் செலுத்தவேண்டும் என்றும், கல்விப் பயிற்சி மேலெழுந்த முறையில் அமையாமல், ஆழ்ந்து அகன்ற நுணுக்கத்தோடு அனுபவத்தில் நிறைவுறுவதாக அமைதல் வேண்டும் என்றும் குறிப்பிட்டார்கள். துணைவேந்தர் அவர்களின் சுவைமிகுந்த சொற்பொழிவை அனைவரும் கேட்டு இன்புற்ருர்கள்.

மாணவர் தலைவர் நன்றியுரைக்குப்பின் நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவேறியது.

## ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியில்

# புரவலர் தினவிழா

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியின் புரவலர் தினவிழா 1144 ஆம் ஆண்டு ஆவணித்திங்கள் மூலநன்னாளன்று மிகச்சிறப்பாக நடைபெற்றது. பள்ளி மாணவர்கள் அனைவருக்கும் இனிப்புக்கள் வழங்கப்பட்டது.

அன்றுமாலை விழாவிற்குத் திருநெல்வேலி தலைமைக் கல்வி அதிகாரி திரு. K. கோபாலன் அவர்கள் M.A , MSC., B. T., தலைமை தாங்கினார்கள். இறைவணக்கத்திற்குப்பின் பள்ளித் தாளாளர் திருமிகு. சண்முகசுந்தரராசன் அவர்கள்தலைவருக்கு வரவேற்பிதழை வாசித்தளித்தார்கள்.

பின்னர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் துவக்கப்பள்ளியின் மாணவ மாணவியர் கலைநிகழ்ச்சிகள் நடத்தினர். உயர்நிலைப் பள்ளி மாணவர்கள் ''பக்த மார்க்கண்டேயர்'' வரலாற்றை நாடகமாக நடித்தனர். ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றிருக்கும் அறக்கட்டளைகளின் வட்டி வருமானத்திலிருந்து நீதிநெறி விளக்கம், தேவாரப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் ரொக்கத்தொகை ரூ. 230/– ம் நல்லாசிரியர் ஒருவருக்கு ரொக்கப் பரிசாக ரூ. 100. ம் அளிக்கப்பட்டது, மேலும் இவ்வாண்டு பள்ளி இறுதித் தேர்வில் முதல் மதிப்பெண் பெற்ற மாணவருக்கு ஆதித்தனார் பரிசுத்திட்டத்திலிருந்து முதன் முறையாக ரூபாய் 100 ம் ரொக்கப் பரிசளிக்கப்பட்டது. பரிசுகளைத் திருமதி வேதம் கோபாலன் அவர்கள் வழங்கினார்கள். தலைவர் அவர்கள் மாணவர்களுக்கு அறிவுரை கூறியும், பள்ளியின் முயற்சிகளைப் பாராட்டியும் சொற்பெருக்காற்றினார்கள். இறுதியில் பள்ளித்தலைமை ஆசிரியர் அவர்கள் நன்றி நவில நாட்டு வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

1968-69ம் வருஷத்திலும் வழக்கம்போல்
ஸ்ரீவைகுண்டத்துக்கு திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள் கருணைபாலித்தருளிய கல்வி யுதவி
நன்கொடை விபரம்.

---

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் அரசினர் உயர் நிலைப்பள்ளி ஸ்ரீவைகுண்டம் மாணவிகளுக்குக் கந்தர் கலிவெண்பாப் பாராயணப் பரிசு ரூ. 1900.
2. தேவாரப்பரிசு. முதற்பரிசு ரூ. 70. இரண்டாம் பரிசு ரூ. 50. (முதற்பரிசு பெற்றவரோ அல்லது அவர் பெற்றோர் அல்லது கார்டியனோ காசியாத்திரை செய்ய உதவி நிதி ரூ. 150.)
3. நீதிநெறிவிளக்கப்பரிசு. குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி 2 பரிசுகள் ரூ. 55. ஷை அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ரூ. 55.
4. சகலகலாவல்லிமாலைப் பரிசு ரூ. 50.
5. மங்கையர்க்கரசியார் நினைவுப்பரிசுகள் 3. (11, 10, 9வது வகுப்புகளில்) ஆண்டு இறுதிப் பரிசைஷயில் அதிக எண் அம்சங்கள் பெற்ற மாணவிகளுக்கு முறையே ரூ. 40, 35, & 25. பரிசுகள்.
6. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளி ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞானசம்பந்தர் நினைவு ஆசிரியர் பரிசு ரூ. 100.
7. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில் வாசிக்கும் ஏழை மாணவர்கள்26பேர்களுக்கு மடத்தில் அன்னம்பாலிப்பு (தினசரி 2 வேளை. நண் பகல், இரவு)
8. மாதம் 1க்கு ரூ. 100 சம்பளத்தில் தேவார ஆசிரிய ருக்கு வருடம் 1க்கு ரூ. 1200.

9. குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியின் பராமரிப்பு நடப்புச் செலவுக்கென ரூ. 10,000 மூல தனத்தில் அறக்கட்டளை நிறுவி அதன் வருட வட்டி வருமானம் ஆண்டுதோறும் ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் மூலம் ரூ. 300/-ம் வழங்கி வருவதோடு மூலதனத்துக் கென ரூ. 30,000/- ம் ஷை பள்ளியின் மானேஜிங் கமிட்டியிடம் வழங்கி அதன்வட்டி வருமானமும் ஷை உயர்நிலைப்பள்ளி அடைந்து வருவது நீங்கலாக ஆண்டு தோறும் பராமரிப்புக்கென உயர்நிலைப்பள்ளிக்கு ரூ. 1,500/-ம் தொடக்கப்பள்ளிக்கு ரூ.300/-ம் உதவப் பெற்று வருகிறது.

திருச்செந்தூரிலும் இதைப்போலவே கந்தர்கலிவெண்பாப் பாராயணம் செய்திருக்கும், அரசினர் பெண்கள் உயர்நிலைப் பள்ளி மற்றும் திருச்செந்தூரில் தனியார் நடத்தும் உயர் தொடக்கப்பள்ளியிலுமுள்ள மாணவிகளுக்குமாக எண்டோ மெண்டு வட்டி வருமானத் தொகை (சுமார் ரூ. 1,800) வருடந்தோறும் பரிசாக வழங்கி வருவதோடு தேவாரப்பரிசு ரூ. 120ம் நீதிநெறிவிளக்கப்பரிசு ரூ. 55ம் மாணவ மாணவி களுக்கு வருடந்தோறும் வழங்கப் பெறுகிறது.

திருச்செந்தூர் சைவ வேளாளர் ஐக்கிய சங்கம் நூல் நிலையத்திற்கு மூலதனம் ரூ. 5000ம் வழங்கி அதின் வருட வட்டி வருமானம் ரூ. 205ம், நூல்கள் வாங்க உதவப்பெறு கிறது.

ஸ்ரீவைகுண்டம், அருள்நந்திநகர் ஸ்ரீ குமரகுருபர சுவாமி கள் ஆர்ட்ஸ் காலேஜில் B. A., B SC. வகுப்புகளில் வாசிக்கும் தகுதியுள்ள மாணவர்கள் 18 பேருக்கு, ஒவ்வொருவருக்கும் மாதம் ரூ. 20 உணவுக்கென உதவித்தொகை வழங்கப்பெறு கிறது.

1. ஆண்டுதோறும் ஷை கலைக்கல்லூரியின் இரண்டு மாண வர்களுக்கும், ஒரு ஆசிரியருக்கும் காசியாத்திரை செய்து வர உதவித்தொகை ஒவ்வொருவருக்கும் ரூ. 150/- வீதம் வழங்கப்பெறுகிறது.

2. பி. யூ. சி. வகுப்பில் வாசிக்கும் ஏழை மாணவன் ஒருவனுக்கும், பட்ட வகுப்பில் வாசிக்கும் ஒரு மாணவனுக்கும் தனித்தனியே ரூ. 150 உதவித் தொகை அளிக்க வசதி உள்ளது.

3. டி. காலேஜ் நூல்நிலையத்துக்கு புத்தகங்கள் வாங்க ஆண்டுதோறும் ரூ. 500/-ம், புரவலர் தினவிழாவிற்கு ரூ. 500/- மாக மொத்தம் ரூ. 1,000/- உதவியளிப்பதற்கான அறக்கட்டளையொன்றும் உள்ளது.

குறிப்பு: குமரிமுதல் காசிவரைக்கும் இதுபோல் பற்பல இடங்களிலுமுள்ள உயர்நிலைப்பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்களுக்கும் உதவியளிக்கப்பெற்று வருவதும் மற்றும் திருமுறைப் பதிப்புநிதி, திருக்குறள் எண்டோமெண்டு முதலான சைவ சமய வளர்ச்சிக்கான அறக்கட்டளைகள் பல லக்ஷக்கணக்கான ரூபாய் மூலதனத்தில் நிறுவப்பெற்றுள்ளன. ஸ்ரீவைகுண்டம் சம்பந்தப்பட்டமட்டிலும் கூட மேற்சொல்லப் பெற்றிருக்கும் தர்மங்கள் தவிர ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், மடாலயம், ஸ்ரீ சோடச விநாயகர் கோவில் முதலான ஸ்தாபனங்களின் பராமரிப்பு, நித்திய விசேஷ வைபவத் திட்டங்களுக்குரிய அறக்கட்டளைகள் பலவற்றின் விபரமும் இப்பத்திரிகையின் இடவசதி கருதி இத்துடன் நிறுத்திக்கொள்ளப்படுகிறது.

# நிலையா யாக்கை

வித்துவான் திரு. கோ. கோவிந்தசாமி அவர்கள்,
தமிழாசிரியர்,
இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி,
சென்னை - 1.

---

ஞாலத்தில் பிறந்த மாந்தன் தன்னைப்பற்றிச்சிந்திப்பதே இல்லை. தான், என்றும் அழியாமல் நிலைத்து நிற்கக் கூடியவன் எனக்கருதிப் பிறர் அருவருக்கத்தக்க செயல்களை ஆற்றுகின்றான். அதனால் அவன் வாழ்வும் பரிதாபத்திற் குரியதாக இருக்கின்றது.

தோற்றம் உண்டானபோதே மறைவும் உண்டு என்பது உறுதி. அதை மாற்ற எவராலும் இயலாது. உறங்குவது போன்று சாக்காடும், உறங்கி விழிப்பதுபோலப் பிறப்பும் ஏற்படுகிறது என்பது வள்ளுவப் பெருந்தகையின் கருத் தாகும்.

ஐயா, செல்வந்தர் குமரப்பரைத் தெரியுமா? அவர் மறைந்து விட்டார் என்று ஒருவர் மற்றொருவரிடம் கூறுவதும், என்ன? மறைந்து விட்டாரா? சிறிது நேரத்திற்கு முன்புதானே அவருடன் உரையாடிவிட்டு வந்தேன். நன்றாக இருந்தாரே என வேறொருவர் கூறுவதும், அதற்கு முதலில் பேசியவர்...நன்றாக இருந்தவர்தான், எதிர்பாராமல் நெஞ்சு வலிகண்டு சில நிமிடங்களில் அவர் உயிர் பிரிந்துவிட்டது என்று கூறும்போது, என்ன உலகமிது, நிலையற்ற உலகம் என்று கூறி மற்றவர் வருந்தும் நிகழ்ச்சியை அடிக்கடி காணலாம். நேற்று இருந்தவர் இன்று இல்லை. இன்று இருப்பவர் நாளை இருப்பார் என்று நிச்சயமில்லை. உலகம் இத்தகைய பெருமையை உடையதாக உள்ளது.

மாந்தர் யாக்கையின் அழிவு எப்பொழுது நிகழுமென்று கூற இயலாது. இன்றோ, நாளையோ, இரவிலோ, பகலிலோ, உண்ணும்பொழுதோ, உறங்கும்பொழுதோ-எவ்வமயம் என உணர எவராலும் முடியாது. யாக்கையின் அழிவு திடீரென்று ஏற்படுவதாகும்.

இளமையும், யாக்கையும், செல்வமும் நிலைத்து நிற்கக் கூடியவை அல்ல. மின்னல்போல் தோன்றி மறையக் கூடியவையாகும். மாந்தர் யாக்கை எத்தன்மையது என்பதை,

> **வினையின் வந்தது வினைக்கு விளைவாவது**
> **புனைவன நீங்கிப் புலால் புறத்திடுவது**
> **மூத்து விளியுடையது தீப்பிணியிருக்கை**
> **பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்**
> **புற்றடங்கு அரவில் செற்றச் சேர்க்கை**
> **அவலக்கவலை கையாறு அழுங்கல்**
> **தவலா உள்ளம் தன்பாலுடையது**
> **மக்கள் யாக்கை**

எனக் கூறுகிறது சூளாமணி.

இத்தகைய யாக்கையைப் பெற்ற மாந்தரின் வாழ்நாள் பாதி உறக்கத்தில் கழிகின்றது. மறுபாதி தளர்வையும், மூப்பையும் மெய்கொள்கின்றது. துயிலும் மூப்பும் போக உள்ள வாழ்நாள் பற்பலதுன்பங்களுக்கு ஏதுவாகின்றது. ஆதலால் இவ்வுலக வாழ்க்கை இரங்குதற்குரியது.

> **வாழ்நாளிற்பாகம் துயினீக்கி மற்றவற்றுள்**
> **வீழ்நாளிடர் மூப்பு மெய்கொள்ளும் — வாழ்நாளுட்**
> **பன்னோய் கவற்றப்பரிந்து குறையென்னை**
> **அன்னோ வளித்திவ் வுலகு**

என நவில்கிறது அறநெறிச் சாரம்.

மாந்தனுக்கு, இரண்டு கால்களை நெடியதூண்களாக ஊன்றியும், நீண்ட முதுகெலும்பைச் சட்டமாக இட்டு விலா எலும்புகளைக் கொடுங் கைகளாக வளைத்து, அவை கூடிநிற்றற்கு நல்ல மிருதுவான தோலால் மூடின இறைச்சி மயமான யாக்கை அமைந்துள்ளது. சிறிய மனைபோன்று உள்ள இதனை அறிவற்றவர்தான் பார்த்துப் பார்த்துப் மகிழ்வர். துன்பத்திற்குக் காரணமான யாக்கை என்பதை

உணர்ந்து, பிறப்பினை ஒழிக்க முயலாமல் தீச்செயல்களில் மனதைச் செலுத்துதல் புண்ணின் மீது வாள்தாக்க அதனைத் தடுக்காமல் இருந்தாற்போலாகும்.

பொருள்கள் மேல் அளவற்ற வேட்கையும், இல்லத் தலைவிபாற் காதலும், உற்ருரிடம் அன்பும் உள்ளத்தடக்கிய புலால்நாற்றம் வீசும் யாக்கை காலனிடம் சிக்கிய காலத்து, கயிறற்றவிடத்து ஊஞ்சல் போலச் செயலற்று வீழ்ந்து கிடக்கும்.

யாக்கைக்கும் உயிருக்கு முள்ள தொடர்பு பறவைக்கும் அதன் முட்டைக்குமுள்ள தொடர்பேயாகும் என அழகாகக் கூறுகிருர் தமிழ் மறைதந்த திருவள்ளுவர்,

> **குடம்பைதனித் தொழியப்புள் பறந்தற்றே**
> **உடம்போடு உயிரிடை நட்பு.**

இளமைப்பருவம் நீரில் தோன்றி மறையும் குமிழியைப் போன்றதாகும். செல்வமோ நீரிலே காற்றினுல் சுருட்டப் படும் அலைகள் போன்றதாகும். யாக்கையோ நீரில் எழுதிய எழுத்திற்கு ஒப்பாகும். இங்ஙனமிருக்க இறைவனை வாழ்த்தி வணங்காதது ஏனோ என்று கூறுகிருர் குமரகுருபரசுவாமிகள்.

> **நீரிற் குமிழி இளமைநிறை செல்வம்**
> **நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள் — நீரில்**
> **எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே**
> **வழுத்தாத தெம்பிரான் மன்று.**

யானையினது தலைமேல் கொள்ளப்பட்ட குடை நிழலிற் செல்லும் அரசரும் இறந்து மண்ணுனர் என்று இழித்துரைக் கப்பட்டனரேயன்றி இறவாமல் நின்றவர் இவ்வுலகத்தில் எவருமிலர். மலையுச்சியில் உலவுகின்ற மேகம்போலக் காணப் பட்டு மற்றும் ஆங்கே நிலைத்து நில்லாது யாக்கை அழிந்து விடும். ஆதலின் முன்செய்த நல்வினையினுல் யாக்கையைப் பெற்றவர் அதனுலாய பயனைக் கொள்ளுதல் வேண்டும். வீண் பொழுதுகளில் காலத்தைக் கழிக்காது எல்லாம் வல்ல இறைவனைப்போற்றி, இனிப் பிறவா யாக்கையைப் பெறுவ தொன்றே சிறந்த நெறியாகும்.

யாக்கையில் இருவகை உள. ஒன்று நிலையா யாக்கை. மற்ருென்று இவ்வுலகில் நிலைத்து நிற்கும் யாக்கை. நிலையா

யாக்கை ஊனாலும், நரம்புகளாலும், குருதியினாலும் ஆகியது. விரைவில் அழியுந்தன்மையுடையது.

நிலைத்து நிற்கும் யாக்கை ஒருவன் தனது நற்செயல்களால் தேடிக் கொள்ளும் புகழால் ஆனது. இது மறையினும் மறையாதவாறு நிலைத்து நிற்கும். ஞாலமே போற்றுமளவிற்கு அந்த யாக்கை புகழால் சிறந்து விளங்கும்.

ஆம். புகழைத்தவிர மறைந்தும் மறையாமல் நிற்கக் கூடியது வேறு எதுவுமில்லை. இதனை...

ஒன்ரு உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்ருது நிற்பதொன் றில்

எனக் கூறுகிறார் திருவள்ளுவர்.

தம் நாட்டிற்காக, மொழிக்காக, மக்கள் நன்னெறியில் செல்வதற்காகப் பணிபுரிந்து, அதற்காகத் தம் உயிரையும் ஈந்த சான்றோர், இறைவனிடம் பேரன்புபூண்டு செயற்கருஞ் செயல்களைச் செய்த திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரமூர்த்தி நாயனர் போன்ற பெரியோர் மனித யாக்கையைப் பெற்று மறைந்தும் புகழெனும் யாக்கையைப் பெற்று மறையாமல் திகழ்கின்றார்கள். மக்கள் மனத்தில் நின்று நிலவுகின்றார்கள்.

மாந்தனின் இருவகை யாக்கையைப்பற்றி நன்கு விளக்கும் பாடல் ஒன்றை இங்கே காணலாம்.

''ஒருவனது இரண்டு யாக்கை
ஊன் பயில் நரம்பின்யாத்த
உருவமும் புகழும் என்றுஆங்கு
அவற்றின் ஊழ் காத்துவந்து
மருவிய உருவம் இங்கே
மறைந்து போம் மற்றயாக்கை
திரு அமர்ந்து உலகம் ஏத்தச்
சிறந்து பின்நிற்கும் அன்றே.

மாந்தன் இவ்வுலகை விட்டே மறைந்து விடினும், அவன் மறையாதவாறு காத்து நிற்கக் கூடியது புகழ் ஒன்றுதான் என்பதை இப்பாடல் மூலம் நன்கு உணரலாம். அத்தகைய புகழைப்பெருது வெறும் யாக்கையைப் பெற்றவர்கள் வாழும் இடத்திலுள்ள நிலமும் தன் விளைவு குன்றும் என்பதை,

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# நயத்தகு நட்பு!

திரு. அரங்க. முத்துமணி அவர்கள்,
துணைப்பதிவாளர்,
செந்துறை (Po), திருச்சிமாவட்டம்.

"உன்னுடைய நண்பர்களைச்சொல், பின்னர் நீயா ரென்று நான்சொல்கிறேன்" என்று ஆங்கிலத்தில் ஒரு பழ மொழி உண்டு, இதிலிருந்து, நாம் கொள்ளத்தக்க நட்பினர் எவ்வாறு அமைதல் வேண்டும் என்பது தெள்ளிதிற்புலனும். எனவேதான், ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு அதிகாரம் மட் டுமே வகுத்த வள்ளுவப் பெருந்தகை, நட்புக்கு மட்டும் நான்கு அதிகாரங்கள் நவின்றுப் போந்தார். அவை, நட்பு, நட்பு ஆராய்தல், தீ நட்பு, பின்னர் கூடாநட்பு என்பன. எத்தனையோ நட்புக்கள் இருப்பினும், தலையாய நட்பு, உள் ளத்தில் ஏற்படும் உணர்ச்சியின்பாற் பட்டதாக அமைதல் வேண்டும் என்பது வள்ளுவர் வலியுறுத்திக் கூறும் தெள்ளிய கொள்கை.

> ''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும் '

என்ற அழகுறு குறளே பழகுறு நட்பின் பாங்கினை பளிங் கென எடுத்துக்காட்டும். புணர்ச்சி (ஒன்றுகப்பழகுதல்)

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

> வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
> யாக்கை பொறுத்த நிலம்

என்ற பாடல்மூலம் நமக்கு அறிவுறுத்துகிறது வள்ளுவரின் வாய்மொழி. நிலையா யாக்கையைப் பெற்றுள்ள நாம், புகழால் சிறந்து என்றும் அழியாது நிற்கும் யாக்கையைப் பெற முயல் வோமாக.

வயப்படாது, உணர்ச்சியின் வயப்பட்டு, நல்லநட்புக்கு நனி சான்ற எடுத்துக்காட்டுகளாக விளங்கியவர்கள் கோட்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் .... .... அருந்தமிழ் மூதாட்டி ஔவையார்பால், பொருந்திய அன்பினுல் – நட்பினுல், அரிய நெல்லிக்கனியை உரியமுறையில் அளித்தான் அதிகமான். இப்படிப் பெட்புறு நட்பின் பெற்றியை எடுத்துக்காட்ட பற்பல சான்றுகள் உள்ளன.

புதுமையான ஒருவகை நட்பு புறப்பட்டிருக்கிறது. அது "ரயில்வேநட்பு". அது புகைவண்டியில் புன்னகை யோடு பேசி, (நீண்டகாலம் பழகியவர்கள்போல்) பின்னர் வண்டியை விட்டு இறங்கியவுடன், உடனே மறந்துவிடுவது; அது நிலேத்து நிற்காதது.......

ஆனுல், இவைகளுக்கு அப்பாற்பட்ட ஒரு நட்பை, நயத்தகு நட்பை வியத்தகு முறையில் வழுத்துகிருர் ஆசிரியர் வள்ளுவப்பெருந்தகை. அதுதான் உடம்புக்கும் உயிருக்கு முள்ளநட்பு. வியப்பாக இருக்கிறதல்லவா ? உடம்பொடு கூடிய உயிர் நட்புமுறையில் உள்ளதா ? சிந்திக்கப்பாற்று.

முட்டையும், அதனுள் உண்டாகும் கருவும் ஒட்டிப் பிறக்கினும், கரு உருவாகி, உரு குஞ்சாகி, முட்டையின் ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியேறுமாப்போல், உட லும், உயிரும் ஒன்ருகப் பிறக்கினும், உயிர் ஒருநாள் உடம்பை விட்டு நீங்கிவிடுகிறது. இதனையே வள்ளுவர், நல்லதொரு உவமையோடு,

"குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு"

என்ருர். நட்பின் இயல்பு நல்ல காரியங்களைச் செய்வது. எனவே உடலும் உயிரும் பிணைந்த உற்றதோர் நட்பில்– வாழ்வில்-அறவழியில் நின்று செயலாற்ற வேண்டும். அதற்கு அறவாழி அந்தணன் தாளைச் சேருதல் முறையாக அமையும்.

"குடம்பை" - என்பதற்குக் கூடு என்ற பொருளு முண்டு. எனவே, உடம்பாகிய கூட்டைவிட்டு உயிராகிய பறவை பறப்பதற்கு முன்னரே, இறைவன் திருவடிகளைப் பற்றவேண்டும்:

''முற்றுவெண் திங்கள் முதல்வன் பாதமே
பற்று நின்றாரை பற்று பாவமே!''

என்றார் நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந் தப்பெருமான்.

''வருஞானத் தவமுனிவர் வாகீசர்'' - என்று செந்தமிழ் வல்ல சேக்கிழார் பெருமானால், சீர்த்தியுடன் பாடப்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகளும், மேலைக்காட்டுப்பள்ளிப் பதிகத் திலே,

''கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே''

என்று பாடுகின்றார்கள்.

எனவேதான், ''இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித் தேன்'' என்றும் மணிவாசகப்பெருந்தகை கூறியருளினார்கள்.

மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய, விலங்கு மனத்தால் கலங்கி அழியாது, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, வழிபட்டால், வழிதவறி நிற்கும் நம் வாழ்க்கைக்கு, நல்ல வழிகாட்டுவான் இறைவன். நயத்தகு முறையில் அமைந்த இந்த நட்பு, நாட்பட நீடிக்க, - அதாவது வாழ்வு வளம்பெற, அவனருளாலே அவன்றாள் வணங்குதல் வேண் டும்! அனைத்து நட்பும் நீங்கினாலும், நீங்காத ஆண்டவ னுடைய நட்பு-அருள் கிடைத்தால் அதுவே பெற்ற பிற வியின் பெரும்பயன். எனவே அந்தப் பயனைப்பெற பல் லோரும் ஏத்திப் பணிந்து அல்லற் பிறவியை அறுப்போம்; நல்லதோர் நட்பை வளர்ப்போம்.

''புலம்ஐந்து; புள்ஐந்து; புள்சென்று மேயும்
நிலம்ஐந்து; நீர்ஐந்து; நீர்மையும் ஐந்து;
குலம்ஒன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்
உலம்வந்து போம்வழி ஒன்பது தானே''

—திருமந்திரம்

# காலக் கணிதம்

திரு. A. இராசமாணிக்கம் அவர்கள்,
உதவி ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்தொடக்கப்பள்ளி,
திருப்பனந்தாள்.

---

*(மலர் 19 இதழ் 8 பக்கம் 406ன் தொடர்ச்சி)*

**இதழ் 4.**

முன்குறிப்பு:

முன் 3 வது இதழில் தேவ வருஷமானத்தால் யுகங்கள், மன்வந்தரங்கள், கற்பகாலம் முதலியனவும், யுகாதி புண்ணிய தினங்களும் குறிப்பிடப் பட்டுள்ளது. இவ்விதழில் மனுவாதி கல்பாதி புண்ணியதினங்களையும் கிரஹண சம்பவம் அதன் வகைகளையும், ஸ்பரிஸ மோக்ஷ திக்குகள், சாரஸ்காலத்தால் கிரஹணம் கணக்கிடல் அதன் புண்ணியகாலம் ஆகியவற்றையும் காண்போம்.

**மனுவாதி புண்ணியதினங்கள்:**

மனுக்களானவர் (1) சுவாயம்புவர், (2) சுவரோசிஷர், (3) உத்தமர், (4) தாமஸர், (5) ரைவதர், (6) சாட்சுஷர் (7) வைவஸ்தர், (8) சாவர்ணி (9) தக்ஷசாவர்ணி, (10) பிரம சாவர்ணி, (11) தர்மசாவர்ணி (12) ருத்ர சாவர்ணி (13) ரௌச்சியர் (14) பௌமர் முதலியோராவர்.

பிரமாவின் பகற்பொழுதில் இவ்வித 14 மனுக்களும் அதிகாரம் செய்வார்கள். ஒவ்வொரு மனுக்களின் அதிகார முடிவான மன்வந்திரங்களானவை எழுபத்தொரு மகாயுகங்களாகும். தேவேந்திரன் முதலிய சமஸ்த தேவர்களுக்கும் மேற்சொல்லிய மனுக்களுக்கும் இதுவே ஆயுள் பிரமாணமாகும். பிரமதேவனுடைய பகற்காலமானது ஒரு கற்பம் என்று சொல்லப்படும். அக்கற்பமாவது சிருஷ்டிமுதல் பிரளயாந்தமாகிய காலமாம். இந்த பிரமாவின் பகற்பொழுது

முடிவில் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் என்னும் மூன்றுலகங்களும் அழியும்படியான தினப்பிரளயம் ஒன்று உண்டாகும். அந்தபகற் பொழுது அளவாகிய இராப்பொழுதிலே பிரமாவானவர் நித்திரைசெய்து இரவின் முடிவாகிய விடியற்காலத்தில் திரும்பவும் எழுந்து சராசரங்கள் எல்லாவற்றையும் சிருஷ்டி செய்தருளுவார். இனிபுண்ணியகாலங்களைக் கவனிப்போம்.

புண்ணிய தினங்களாவன: சைத்திரசுத்த திருதியை அதாவது ஸௌர மானத்தின் பங்குனிமாசத்திய சுக்கில பக்ஷத்தில் வருகிற திருதியை உத்தம மனுவாதி புண்ணியதினமாகும். ஷ பக்ஷத்தில் வருகிற பௌர்ணமி ரவுச்சிய மனுவாதி புண்ணியதினமாகும். ஆஷாட சுத்ததசமி சாஷுஸ மனுவாதி புண்ணியதினமாகும். ஷ பக்ஷத்தின் பௌர்ணமி அக்கினிஸாவர்ணி மனுவாதி புண்ணியதினமாகும். சிராவண பகுள அஷ்டமி சூரிய சாவர்ணி மனுவாதி புண்ணியதினமாகும். பாத்திரபத சுத்த திருதியை தாபஸ மனுவாதி புண்ணியதினமாகும். ஆஸ்விஜ சுத்தநவமி ஸ்வாரோசிஷ மனுவாதி புண்ணிய தினமாகும். கார்த்திக சுத்தசுவாதசி சுவாயம்பு மனுவாதி புண்ணியதினமாகும். ஷ. மாத பக்ஷ பௌர்ணமி இந்திரஸாவர்ணி மனுவாதி புண்ணியதினமாகும். புஷ்ய சுத்த ஏகாதசி ரைவத மனுவாதி புண்ணியதினமாகும். மாக சுத்த சப்தமி வைவஸ்த மனுவாதி புண்ணியதினமாகும். பால்குண சுத்த பௌர்ணமி பிரமசாவர்ணி மனுவாதி புண்ணிய தினமாகும். ஷ அமாவாசை தக்ஷசாவர்ணி மனுவாதி புண்ணியதினமாகும்.

**கல்பாதி புண்ணியதினங்கள்:—**

சைத்திர சுத்தபிரதமை சுவேத வாரக கல்பாதி புண்ணிய தினமாகும். ஷ பஞ்சமி கூர்ம கல்பாதி புண்ணியதினமாகும். வைசாக பகுள திருதியை பார்த்திப கல்பாதி புண்ணியதினமாகும். கார்த்திக பகுள சப்தமி சாவித்திரி புண்ணியதினமாகும். மார்கசிர சுத்த நவமி பிரளய கல்பாதி புண்ணியதினமாகும். மாகசுத்த திரயோதசி வராக கல்பாதி

புண்ணியதினமாகும். பால்குண பகுள திருதியை பிரம்ம கல்பாதி புண்ணியதினமாகும்.

இதுவரை குறிப்பிட்டுள்ள புண்ணிய தினங்களுக்கு சாந்திரமானப்படிக்கு மாதங்களின் பெயரையும், சுக்கில பக்ஷத்தை 'சுத்த' என்றும் கிருஷ்ண பக்ஷத்தை 'பகுள' என்றும் குறிப்பிட்டு திதியையும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பஞ்சாங்கத்தில் அம்மாத, பக்ஷ, திதிகளின் வரிகளில் குறிப்பிட்டிருப்பதைப் பார்த்துத் தெளியலாம்.

**கிரஹண சம்பவம்:—**

ஒரு அண்டகோளம் இன்னொரு அண்டகோளத்தால் மறைக்கப்படுவதைக் கிரஹணம் என்று சொல்லப்படும். சூரியன் மறைக்கப்படும் சம்பவத்திற்குச் சூரிய கிரஹணம் என்றும், சந்திரன் மறைக்கப்படும் சம்பவத்திற்குச் சந்திர கிரஹணம் என்றும் பெயர் கூறுவர். சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் மத்தியில் வருகிறபோது சூரியன் சந்திரனால் மறைக்கப்பட்டு சூரிய கிரஹணம் சம்பவிக்கிறது. சந்திரனுக்கும் சூரியனுக்கும் இடையில் பூமிவரும்போது சந்திரன் பூமியின்நிழலால் மறைக்கப்பட்டு சந்திரகிரஹணம் நிகழ்கிறது.

சந்திரன் ஆகாய மண்டலத்தில் செல்லுகிற பாட்டையைச் சந்திர மண்டலம் என்றும், பூமி செல்லுகிற பாட்டையைக் கிராந்தி மண்டலம் என்றும் சொல்லுவர். கிராந்தி மண்டலமும் சந்திர மண்டலமும் ஒன்றை ஒன்று சுமார் 5 பாகை தள்ளி இரண்டு இடங்களில் வெட்டுகின்றன. அதை இராகு, கேது நாடேஸ் (Nodes) என்று சொல்லப்படுகிறது. அதாவது இருமண்டலமும் வெட்டுகிற இடங்களில் (இராகு, கேதுக்கள் அல்லது Nodesல்) ஒன்றை ஒன்று சந்திக்கின்றன. இராகு கேதுக்கள் இருக்கும் இடத்தில் அல்லது அதன் அருகாமையில் சந்திரன் இருக்கும்போதுதான் சூரியனும், பூமியும், சந்திரனும் ஒரேவரியில் இருந்து ஒன்றை மற்றொன்று மறைக்கிறது. இவ்விதம் நிகழும் சூரிய சந்திர கிரஹணங்கள் இராகு, கேதுக்கள் இருக்கும் இராசி மாதத்தில் அமாவாசையில் சூரிய கிரஹணமும், பௌர்ணமியில் சந்திர கிரஹணமும் நிகழும். அமாவாசை திதி முடிவுபெறும் போதுதான் பெரும்பாலும்

சூரிய கிரஹணத்தின் மத்தியகாலம் ஆகும். கிருஷ்ணபக்ஷ அமாவாசை முடிவிற்கு முன்னே சூரிய கிரஹணம் ஆரம்பமாகி சுக்கிலபக்ஷ பிரதமையில் விட்டுவிடும். இதுபோல் சுக்கிலபக்ஷ பௌர்ணமி முடியும்போது பெரும்பாலும் சந்திர கிரஹணத்தின் மத்திய காலமாகும். சுக்கிலபக்ஷ பௌர்ணமி முடியுமுன்னே சந்திரகிரஹணம் ஆரம்பமாகி கிருஷ்ணபக்ஷ பிரதமையில் விட்டு விடுகிறது.

**கிரஹண வகைகள்:—**

கிரஹணங்களாவன பூர்ண கிரஹணம் என்றும் பார்சுவ கிரஹணம் என்றும், கங்கண கிரஹணம் என்றும் மூன்று வகைப்படும். சந்திரனுல் சூரியன் மறைக்கப்படுவதுபோல் சுக்கிரனுலும், புதனுலும் சூரியனுக்கு கிரஹணம் நிகழ்வதுண்டு. இவ்விதம் சந்திரனுல் நக்ஷத்திரங்கள் மறைக்கப்படுவதற்கு சந்திரனுல் நக்ஷத்திரங்களுக்கு கிரஹணம் என்றும் சொல்லப்படும். பூரண சந்திர கிரஹணம் ஒரு இடத்தில் அடிக்கடி சம்பவிக்கும். ஆனுல் பூரண சூரிய கிரஹணம் ஒரே இடத்தில் அநேக வருஷங்களுக்கு ஒருதரம்தான் சம்பவிக்கும். சந்திர கிரஹணத்தில் சந்திரனுக்கு அருகில் இராகு இருந்தால் இராகு கிரஸ்தம் என்றும் கேது இருந்தால் கேது கிரஸ்தம் என்றும் சொல்லப்படும். இவ்விதம் சூரிய கிரஹணத்திலும் இராகு கிரஸ்தம், கேது கிரஸ்தம் என்று சொல்லப்படுகிறது. சூரியனுக்குரிய நாளாகிய ஞாயிற்றுக் கிழமையில் சூரிய கிரஹணமும், சந்திரனுக்குரிய நாளாகிய திங்கள் கிழமையில் சந்திர கிரஹணமும் சம்பவித்தால் இவ்வித கிரஹணங்களுக்குச் சூடாமணி கிரஹணம் என்று சொல்லப்படும்.

**ஸ்பரிஸ மோக்ஷங்களின் திக்கு:—**

சூரிய கிரஹணத்தின் போது சந்திரன் மேற்கிலிருந்து கிழக்கில் செல்வதால் சூரியனின் மேற்குபாகம் முதலில் மறைகிறது. சந்திரன் சூரியனைத்தாண்டி கிழக்கே சென்று விடுவதால் கிழக்குப்பாகம் கடைசியில் விடப்படுகிறது. இந்த சூரிய கிரஹணத்துக்கு வடமேற்குத்திக்கிலும் தென்மேற்கு திக்கிலும்கூட ஸ்பரிசம் ஏற்படும். சந்திரன் வடக்கிலிருந்து தெற்கே வரும்போது வடமேற்கிலும், தெற்கிலிருந்து

வடக்கே செல்லும்போது தென்மேற்கிலும் ஸ்பரிசம் உண்டாகும். இவ்விதம் வடமேற்கில் ஸ்பரிசம் உண்டானால் தென்கிழக்கிலும் தென்மேற்கில் ஸ்பரிசம் உண்டானால் வடகிழக்கிலும் மோக்ஷகாலம் ஆகும்.

சந்திரகிரஹணம் பெரும்பாலும் கிழக்குத்திக்கில் பிடித்து மேற்குத்திக்கில் விடும். சந்திரன் கிராந்தி மண்டலத்தில் தெற்கிலிருந்து வடக்கில் செல்லும்போது தென்கிழக்குத்திக்கில் ஸ்பரிசமும், வடமேற்குத்திக்கில் மோக்ஷமும் ஆகும். சந்திரன் கிராந்தி மண்டலத்தில் வடக்கிலிருந்து தெற்கில் செலலும்போது சந்திர கிரஹண ஸ்பரிசம் வடகிழக்கிலும், மோக்ஷம் தென்மேற்கிலும் ஆகும்.

**சாரஸ்காலத்தால் கிரஹணம் கணக்கிடல்:—**

ஒருகிரஹணம் சம்பவித்தபிறகு 18 வருஷம் 10 அல்லது 11 நாள் 42 நிமிஷம் 34 வினாடி பொறுத்து அதேகிரஹணம் சம்பவிக்கும். (இந்த சாரஸ் காலத்துக்கு 4 லீப் வருஷங்கள் அடங்கியதாயின் 11 தினங்களாகவும் 5 லீப் வருஷங்கள் அடங்கியதாயின் 10 தினங்களாகவும் கணக்கிடுவது வழக்கம்.) சாரஸ் காலப்படி ஒரு கிரஹணத்துக்கும் சாரஸ் காலம் பொறுத்துவரும் கிரஹணத்துக்கும் ஏறக்குறைய 1 மணி வித்தியாசம்வரும். ஆகையால் சாரஸ் காலப்படி கிரஹண ஸ்பரிசகாலம் காண முன் 4 அல்லது 5 சாரஸ்கால கிரஹணங்களைக் கொண்டு குறுகிய வித்தியாச மணியில் கிரஹணத்தை கணிக்கலாம். இது தோராயமானதேயாகும். கணித வல்லவர்கள் இவ்வித நான்கு கிரஹணங்களின் ஒவ்வொரு கிரஹணத்துக்கும் ஒன்றிற்கு ஒன்று உள்ள வித்தியாச தொகையைக் கூட்டி 3 ஆல் வகுத்துவந்த ஈவை 5 வது கிரஹண வித்தியாச மணியில் கழித்துவந்த மணியை 6 வது கிரஹண சம்பவத்தில் சேர்க்க ஸ்பரிச காலம் சரியாய் வருகிறது எனக் கண்டுள்ளனர். இதன்படி. கணித்தும் வருங்கால கிரஹணங்களை குறிப்பிட்டுள்ளனர். இவ்வித சாரஸ்கால கிரஹண கணித முறையால் மோக்ஷ காலத்தையும், கிரஹணபரிமாணமும், மத்திய காலத்தையும் கூட கணிதம் செய்யலாம். மற்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

# மணிவாசகரின் மாண்புறு உவமைகள்

வித்துவான். திரு. பி. ரா. நடராசன் அவர்கள்.

(முன் இதழ் 8-ன் தொடர்ச்சி)

**உவமை 18**

'இரும்பின் பாவை அன்ன' (22)

உ. பொ. ஙி.

. . . . . . . . . . இரும்பின் பாவை
அனையநான் பாடேன்நின்று ஆடேன் அந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவிசோரேன்'.

**பொழிப்புரை.**

இரும்பினுற் செய்த பதுமை போன்ற யான் (நினைவும் செயலுமற்று) நின் புகழைப்பாடேன்; நின்னுடன் ஈடுபடு தலில் நிலைபெற்று ஆனந்தக் கூத்தாடேன்; அந்தோ! உன் அருட்பண்புகளைக் கூறிக்கதறேன்; உன் அருட்பேறுகளை இடையருது கூறுதலினுல் உடல் வருத்தமுறேன்; உயிரு தளரேன்.

**விளக்கம்.**

பக்தியாகிய பெருவெள்ளத்தைக் கூறுகின்றூர். 'அன் பெனும் ஆறு கரையது புரள' என்று பெருமானுர் திருவாய்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

றும் சூரிய சந்திர ஸ்புடம், திதிஸ்புடம் மூலமாகவும் அதற் குரிய முறைகளால் கணிதம் செய்யலாம். இக்காலகணித தலைப்பில் வருங்கால கிரஹண சம்பவங்களைக் கணித்தறிய அதற்குறிய சூத்திரங்களுடனும் உதாரண கணிதங்களுடனும் பின் நவகிரக ஸ்புடம் கூறும்போது அதன்தொடர்பாய் எழுதுவோம்.

**கிரஹண புண்ணியகாலம்:—**

சூரிய கிரஹணம் சந்திரகிரஹணம் இவ்விரண்டிற்கும் ஸ்பரிசகாலமுதல் மத்தியகாலம்வரை புண்ணியகாலம். இதில் ஸ்னான தர்பணுதிகள் செய்யத்தக்கது. மத்தியகாலமுதல் மோக்ஷகாலம் வரை தான காலமாகும்.

(தொடரும்)

மலர்ந்தருளியதை நினைவுகூர்க. மனத்தினை வன்மைபெற்ற இரும்பிற்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார். இதேபோன்று 'இரும் புதரு மனத்தேனை' (திருவேசறவு. 1) 'இரும்பு நெஞ்ச வஞ்சனேனை' (திருச்சதகம் 80) என்று பிறாண்டும் கூறுவதை ஓர்மின்! இரும்பினால் செய்த பாவையை ஆற்று வெள்ளத்தில் இட்டால் அப்பாவை கீழே அழுந்தும். விரைந்து செல்லும் ஆற்று நீரின் இனிய செலவினை அறியாமல் இட்ட இடத் திலேயே கீழே விழுந்து மண்ணுடன் அமையும், இரும்பனைய கடியநெஞ்சங்கொண்ட யானும் உன் இனியபுகழைக் கூறா மலும், செவிமடுக்காமலும், உன் திருப்பெயர்களைக் கேட்டு ஆனந்தக்கூத்து ஆடாமலும் இருந்து, ஒன்றும் அறியாமல் கீழ்நோக்கிச் செல்லாமல் முன்னுக்கு வந்து உன் அருளைப் பெற்றிலேனே எனக்கூறுகின்றார். விரைந்து செல்லும் ஆற்று வெள்ளத்திலிடப்பட்ட மரப்பாவை தண்ணீர் குழியு மிடத்தில் குழிந்தும், விரைந்து செல்லுமிடத்து விரைந்தும், சுற்றுமிடத்தில் சுற்றியும், செல்லும் இந்நிலையை இரும்பால் செய்த பதுமை பெறுமோ ? ஆற்று வெள்ளப் பெருக்கிற்கு இறைவன் திருவருளையும்; தண்ணீரின் விரைவால் நிகழும் செயல்களை அலறுதல், கூத்தாடுதல், உளறல் போன்றவற் றுக்கும்; இரும்புப் பாவையைக் கல்லாகிய மனத்திற்கும் உவ மையாகக் கொள்க.

**உவமை 19**

'செந்தாமரைக் காடனைய மேனி' (26)

உ. போ. நி.

... .. .. செந்தாமரைக்காடு அனைய மேனித்
தனிச்சுடரே.

### பொழிப்புரை

சிவந்த தாமரைக்காட்டினையொத்த உறுப்புக்களோடு கூடிய திருமேனியையுடைய ஒப்பற்ற ஒளிச்சுடரே!

### விளக்கம்

இறைவனின் திருமேனி மட்டுமில்லாது உறுப்புக்கள் யாவும் தாமரையையே போன்றிருத்தலால் 'தாமரைக் காட

னையமேனி' என்றார். 'பூவிற்குத் தாமரையே' என்பதால் தாமரையை அடிகள் கூறினாரென்க. 'அந் தாமரை மேனி' (நீத்தல் விண்ணப்பம் 29), 'செக்கர்போலும் திருமேனி' (புணர்ச்சிப்பத்து. 8) என்று மணிவாசகனார் இறைவனின் திருமேனியைக் குறிப்பர். இவ்வுவமையில் வரும் 'தனிச்சுடர்' என்னுஞ்சொல் மிக்க சிறப்புடைத்தாம். அதன் நயமும் இன்புறற்பாற்றும். தனிச்சுடர் ஒப்பற்ற ஒருபெரும் விளக்கு. ஆம். எவராலும் ஏற்றிவைக்கப்படாமல் பிற விளக்குகளை ஏற்றச்செய்யும் நல்விளக்கு. இறைவன் என்றும் அணையா விளக்காய் விளங்குகின்ற நிலையினை அடிகளார் தம் நூலினுள் பலவிடத்தும் 'செழுஞ்சுடர்', 'ஒளிச்சுடர்', எனக்குறிப்பர். சிவம் என்னுஞ் சொல்லுக்கே செம்மை வடிவினன் என்ப தனையும் ஈண்டு நினைவிற் கொள்ளுதல் வேண்டும். எனவே சிவனார் ஒப்பற்ற ஒரு பெருஞ்சுடராய் விளங்குகின்றார் என் பதில் மிகையொன்றுமில்லை இறைவன் ஆசிரியனாகவும் வந்து மக்களுக்கு நன்னெறிகூறி முறைப்படுத்துவான் என்பதனை மணிமொழிப்பெருமானார் 'குருபரன் ஆகி அருளிய பெரு மையை' எனக் கூறுவர். இதனால் பெறுவது யாதெனின், இறைவன் போன்று ஆசிரியனும் ஒப்பற்ற ஒரு பெருஞ்சுட ராய் ஒழுக்கத்திலும், கல்வியிலும் இருத்தல் வேண்டுமென்பது புலனாயிற்றெனக்கொள்க. எரிந்து கொண்டிருக்கும் சுடர் தான் பிற விளக்குகளை ஏற்றமுடியும். இவ்வுவமை ஆண்ட வனுக்கும் ஆண்டவனோடு ஒருபுடைத்தாக எண்ணப்படும் ஆசிரியனுக்கும் பொருந்தும் திறனைக்கண்டு மகிழ்க. நம் திருவாதவூரர்போன்றே கவியரசர் தாகூர், ஆசிரியரை எரிந்து கொண்டிருக்கும் விளக்குக்கு உவமை கூறினர். என்னே பெரியோர்களின் கருத்தொற்றுமை.

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

(மலர் 19. இதழ் 8-ன் தொடர்ச்சி)

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

95 காருறுகண்ணியரைம்புலனுற்றங்கரைமரமாய்
வேருறுவேனைவிடுதிகண்டாய்விளங்குந்திருவா
ருருறைவாய்மன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
வாருறுபூண்முலையாள்பங்கவென்னைவளர்ப்பவனே.

95 Set in the marge of flowing stream that eats its
banks away, the tree
Shakes to its fall; and thus am I, my sense
bewitch'd by maids' dark eyes.
Uttarakosamangai's king, spouse of gem-vested
Parvati,
Who dwell'st in Arur holy, O protector, for my
help arise.

---

(To be continued.)

---

Reproduced with the kind permission of Oxford University Press, Calcutta.

(N. B. Copies available for sale at the above Press.)

# சொல்லத்திறமோ ?

**திரு. சி. குமாரஸ்வாமி அவர்கள்,**
**176, மேட்டுத்தெரு,**
**நத்தம் (Post) செங்கல்பட்டு.**

---

ஒரு பெரியவர். வயதில்மட்டுமல்ல. அறிவிலும், அன்பிலும், பண்பிலும் கூடப் பெரியவர். அவர் ஒரு பெண்ணைப் பார்த்தார். சாதாரணப் பெண்ணல்ல அவள்! அழகே உருவானவள். ஆபரணங்கள் நிறைய அணிந்தவள். அவர், அவளது அழகை வர்ணிக்க ஆரம்பித்து விடுகிறார். கவிதை உருவில் அவளையே நமக்கும் காட்டுகிறார். கடைசியில் அவள் காலிலே விழுகிறார். நம்மையும் விழவைக்கிறார்!

முதலில் அவர் கண்களில் படுவது அவளது கைவிரல் களிலே அணிந்துள்ள மோதிரங்கள். ஆகா! எவ்வளவு ஒளியுடன் உள்ளன அவை? பிறகு, கால்களை நோக்குகிறார். அவற்றில் பாடகத்தண்டையும், கொலுசும், பச்சை வைடூரியத்தால் இழைக்கப்பட்ட காற்சிலம்புகளும் மிக்க பிரகாசமாக அணிசெய்கின்றன.

அவள் மூக்குத்தியோ முத்தினால் செய்யப்பட்டது. மார்பிலே ரத்தினங்களாலான பதக்கமும், அழகிய மாலையும் அணிந்துள்ளாள். அவளது தாலியானது வைடூரியம், புட்பராகம் இவற்றால் செய்யப்பட்டது. சுத்தமான காது. அதில் கம்மல் ஒளிவீசுகிறது. சிவந்தகைகளிலே பொன்வளையல்கள் அழகுசெய்கின்றன. உலகத்தையே விலையாகக் கொடுத்தாலும் ஒப்பாகாத சிறுகாது கொப்பானது அழகாக அம்மாதின்முகமண்டலத்தை ஒளிசெய்து கொண்டிருக்கிறது. அவள் யார்? எந்த ஊர்? என்பதையும் தெரிந்துகொள்கிறார் அப்பெரியவர். "தாயே! உன்னழகையும், புகழையும், அணி

களின் சிறப்பையும் பற்றிவர்ணிக்க எனக்கு ஏது தகுதி ?'', என்று அவள்காலிலே விழுந்து விடுகிறுர்.

''என்ன ஐயா ? வயதில்பெரியவர். அன்பும் பண்பும் மிக்கவர். பெண்ணைப் பார்த்தார், அவள் அழகை வர்ணித்தார், கவிதைபாடினுர் என்கிறீர்! அவள்காலிலே விழுந்தார். நம்மை யும் விழச்செய்கிறுர் என்று வேறு கதைவிடுகிறீர்'' என்று கேட்பதும் என்காதில் விழுகிறது.

அவள்யார் ? எந்தஊர் ? என்பதைத் தெரிந்து கொண் டதும், நிச்சயம் நீங்கள் அவளிருக்கும் திசைநோக்கித் தெண் டனிடுவீர்கள் முதலில். பின்பு, அவளைநேரில் கண்டுகளிக்கப் புறப்பட்டு விடுவீர்கள். (ரயிலிலோ, பஸ்ஸிலோ அல்லது காரிலோ!).

அவள்யார் தெரியுமோ ? நம்மவரதனின் தங்கை. நம்ம ஏகாம்பரத்துக்கு சம்சாரம் (மனைவி). ஏகாம்பரத்துக்கே அவளாலேதான் புகழ் (மதிப்பு)! அவளது சொந்தஊர் நம் தமிழகத்தில் உள்ள நகரம். அதுதான் காஞ்சிபுரம். இப் போது புரிகிறதா அவள்யாரென்று ? அவள்தான் ம் அன்னை! காமாட்சி! இப்போது சொல்லுங்கள் அவள் காலில் விழாத ஆசாமி உண்டோ ? ''காஞ்சி'' என்றதுமே நமக்கு ஞாபகம் வருவது அம்மை காமாக்ஷிதான். அவள் புகழ்தான் அங்கு ஓங்கியுள்ளது. அப்பெரியவரின் கவிதை (விருத்தம்) இதோ:-

''பத்துவிரல் மோதிரம், எத்தனைபிரகாசமது பாடகந்
தண்டை கொலுசும்; பச்சைவைடூர்ய மிச்சையாய்
இழைத்திட்ட பாதச்சிலம்பி னொளியும்; முத்து
மூக்குத்தியும் ரத்தினப்பதக்கமும் மோகனமாலை
யழகும்; முழுதும்வைடூர்ய புட்பராகத்தினுல்
முடிந்திட்ட தாலியழகும்; சுத்தமாயிருக்கின்ற
காதனிற் கம்மலும் செங்கையிற் பொன்கங்கணம்
செகமெலாம் விலைபெற்றமுக மெலாமொளியுற்ற
சிறுகாது கொப்பினழகும்; அத்திவரதன்தங்கை
சத்திசிவ ரூபத்தையடியனுற் சொல்லத்திறமோ!
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும் அம்மை
காமாட்சி யுமையே!''. (காமாட்சியம்மன்விருத்தம்).

( தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க )

# மலர்ப்பாதம் தந்தருளும் மகாதேவன்

திரு ஸ்ரீராமநாமப்பரதேசி அவர்கள்,
3119. East Second Street,
Pudukkottai – 1, (Trichy. Dt.)

உலகத்தில் எது நடந்தாலும், தன்னைச் சுற்றி எவ்வித மான சம்பவங்கள் நிகழ்ந்தாலும், இறைவனை மறவாது எந் நேரமும் அவன் நினைவாகவே இருப்பவர் சிலர்.

உண்ணினும் வேலுமயிலுமென்பேன்: உண்டெழுந்துவெளி
அண்ணினும் வேலுமயிலுமென்பேன்: அங்குள தொழில்கள்
பண்ணினும் வேலுமயிலுமென்பேன்: பண்ணிபில்லமதை
நண்ணினும் வேலுமயிலுமென்பேன் எங்கள் நாயகனே.

*– ஸ்ரீ வடிவேல் முதலியாரவர்கள்*

இவ்வாறு தனது அன்பு, பரஞ்சோதியான இறைவனுக்கே என்று எப்போதும் பேசிக்கொண்டிருந்த ஒரு பெண் தன்னை மறந்து அழகிய, மெத்தென்ற படுக்கையில் தூங்குகின்றாள். ''என் பக்தியெல்லாம் இறைவனுக்கே என்று கூறிய நீ இப் படித் தூங்கலாமா?'' என அவளை ஒரு தோழி எழுப்புகிறாள். உறக்கத்தின் இன்பநிலை கண்ட அப்பெண் எழாமலே ''அனேக ஆபரணங்களை அணிந்தவர்களே!'' எனத்தன்னை எழுப்பவந்தவர்களை அழைக்கின்றாள். அப்பெண்கள்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

மேலே உள்ள விருத்தம், ஆசிரியர் இயற்றிய பதினொரு விருத்தங்களில் இரண்டாவது. பதினொன்றிலும் பக்திச்சுவை சொட்டுகிறது. ஆசிரியரின் பெயர் தெரியவில்லை. சுயவிளம் பரத்தை விரும்பாத உத்தமர்! இங்கு தரப்பட்டுள்ள விருத் தத்தை நான் முதன்முதலில் ஆனந்தவிகடனில் ''நீரோடை'' தொடர் கதையில் முதல் அத்தியாயத்தில் படித்தேன். பாரா யணம் செய்தேன். காமாட்சியம்மன் விருத்தம் புத்தகமும் ஒன்றுவாங்கி பாராயண புத்தகங்களுள் ஒன்றாக வைத் துள்ளேன்.

''யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்!''

முருகாசரணம் !

வைகறைத் துயில் நீங்கி எழுந்து, நீராடி, நல்லாடையும் அணி களும் அணிந்து இறைவனைத் தரிசிக்கப் புறப்பட்டு வந்துள் ளனர் என்பது குறிப்பு. "இறைவனை வணங்குவதற்காக என்னை எழுப்ப வந்துள்ள நீங்கள் இவ்வாறு கேலி செய்ய லாமா?" என்கின்றாள்.

ஈசனையே பனிந்துருகி இன்பமிகக் களிப்பெய்திப்
பேசினவாய் தழுதழுப்பக் கண்ணீரின் பெருந்தாரை
மாசிலா நீறழித் தங்கருவிதர மயிர்சிலிர்ப்பக்
கூசியே உடல் கம்பித் திடுவார்: மெய்க்குணமிக்கார்.

— சேக்கிழார்.

என்றல்லவோ விளங்கவேண்டும். கேலி செய்வதா? இறை வனின் திருவடி எப்படிப்பட்ட பெருமையுடையது. தேவர் களுக்கும் கிடைக்காத இறைவனன்றோ அப்பெருமான்! இறைவனது அடிமுடி தேடி மாலும் அயனும் புறப்பட்ட னர். அவர்களுக்கு அத்திருவடி கிடைக்கவில்லை. நாம் செய்த புண்ணியத்தால் அடிமுடி இரண்டையும் நம் கண்களால் காணுமாறு தில்லையில் இறைவன் நடராஜமூர்த்தியாக காட்சி யளிக்கின்றான். "ஏ! மனமே? நீ பிரமனுமில்லை! திருமாலு மில்லை. இவ்விடத்தில் உள்ள நடராஜமூர்த்தியும் தீப்பிழம் பாகக் காட்சியளிக்கவில்லை. நீ மிகவும் அருள்பெற்றுள்ளாய். அதனால் தான் இறைவன் சிவகாமவல்லியுடன் காட்சி கொடுப்பதைக் காணும் பாக்கியம் பெற்றுள்ளாய்" என்று உமாபதி சிவாசாரியார்,

காதரமார் தருமனமே கமலமல ரயனல்லை
சீதரமா யனுமல்லை சிவனுமனற் றிரளல்லன்
நீதரமா வருளுடையை! நிலைகலங்கே வினிமன்றில்
ஆதரமா தடனுடு மண்டனடங் கண்டனையால்

என்று தமது கோயிற்புராணத்தில்கூறிப்போந்தார். அப்பேர்ப் பட்ட திருவடியை நமக்கு அளிக்கின்றான் பெருமான்.

தேவர்கள் கூட இறைவனை வாழ்த்துவது, தாம் நல் வாழ்வு வாழவும், தம்மை உலகம் வணங்கிப்போற்ற வேணு மென்ற எண்ணத்தினலேயே!

வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்: மனம் நின்பால்
தாழ்த்துவதும் தாம்உயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி
சூழ்த்துமது கரம்முரலும் தாரோயை! நாயடியேன்
பாழ்த்தபிற ப்பறுத்திடுவான் யானும் உன்னைப்பரவுவனே.

— மாணிக்கவாசகர்.

ஆனால் பாவைகளாகிய நாம் இறைவனையே அடையவேண்டு மென்று நினைப்பதால் இறைவன் திருச்சிற்றம்பலத்துள்ள ஈசன் தன் மலர்ப்பாதம் தந்தருள வந்தருளுகின்றார். தேவர் களுக்கருளக் கூடிய திருவடியை உண்மை பக்தருக்கு அருளு கின்றார்! திருவதிகையிலே சுந்தரமூர்த்தி நாயனாரின் முடிமேல் இறைவன் திருமுடியை வைத்தாரன்றோ! ''பிரமவிட்டுணுக் களுக்கு அளிக்காத நின்திருவடியை, பித்தா என அழைத்த சுந்தரமூர்த்தி நாயனாரின் திருவடிமேல் வைத்த பெருமானே! உன் திருவடிக்கு அவர்திருமுடி மீது என்னதான் ஆசையோ'' என உருகுகின்றார் ராமலிங்கர்.

ஒருமுடிமேற் பிறைவைத்தோய்! அரியயன் ஒண்மறைதம்
பெருமுடி மேலுறவேண்டவராது. உனைப்பித்தனென்றே
மருமுடியூரன் முடிமேல் மறுப்பவும் வந்ததவர்
திருமுடிமேல் என்ன ஆசைகண்டாய் நின்திருவடிக்கே.

அப்பேர்ப்பட்ட திருவடியை இறைவன் நமக்கு அருளவந் துள்ளான். நம்மையும் பக்தரென எண்ணி ஆதரிக்கும் கருணை தான் என்னே! பெரியோர்களே தம்மை பக்தர் என அழைத் துக்கொள்ளக் கூசுவர்.

பேசப்பட்டேன் நின்அடியாரில்: திருநீறே
பூசப்பட்டேன் பூதலரால் உன்அடியான் என்று
ஏசப்பட்டேன்: இனிப்படுகின்றது அமையாதால்
ஆசைப்பட்டேன் ஆட்பட்டேன் உன்அடியேனே.

என்பர் மணிவாசகர்,

இப்பாடல் உறங்கிக்கொண்டிருந்த ஒரு பெண் தன்னை எழுப்பி கேலி செய்த பெண்ணொருத்தியை ''கேலி செய்யும் நேரமில்லை இது. நம்மையாட் கொள்ளுவதற்காக தில்லையம் பலத்திலே நடனம் செய்யும் பெருமான் நம்மையும் பக்தர் என எண்ணி திருவடியை அருள வந்துள்ளான்; இதை உணர வேண்டாமா? '' எனப்பதில் கூறியதாக அமைந்துள்ளது.

எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கு மோனத்தே – வித்தகமாய்
காதிவிளையாடிக் கைவீசி வந்தாலும்
தாதிமன நீர்க்குடத்தே தான்.

என்று பட்டினத்தார் கூறியதுபோல, தூங்கும் போதும் அப் பெண் இறைவனையும் அவனது கருணையையும் மறவாதிருந் தாள் எனத்தோன்றுகின்றது.

நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார்.

–சேக்கிழார்.

என்ற நிலையில், அருள்மூர்த்தியான மாணிக்கவாசகர் குறிப் பிட்டுள்ள அப்பெண் மாதிரி நாமும் எவ்வேளையும் இறை வனைச் சிந்திக்க அருளுமாறு மாணிக்கவாசகப் பெருமானின் மலரடி வணங்குவோமாக!

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல் நாம்
பேசும் போதெப்போதிப் போதார மளிக்கே
நேசமும் வைத்தனையோ! நேரிழையாய்! நேரிழையீர்!
சீ. சீ. இவையும் சிலவோ விளையாடி
ஏசும் இடம் ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசுமலர்ப்பா தம் தந்தருள வந்தருளும்
தேசன் சிவலோகன் தில்லைச் சிற்றம்பலத்துள்
ஈசனார்க் கன்பர் யாம்ஆரேலோ ரெம்பாவாய்!

–திருவெம்பாவை–2

மாணிக்கவாசக சுவாமிகள் திருவடிகளே சரணம்

---

# "தானமும் தவமும்"

திரு. எ. மாணிக்கம் அவர்கள்,
"முருக நிலையம்" விசூர்.

---

நாம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம் பொறிகளையும் நன்கு அறிந்திருக்கின்றோம். ஆயினும் குழலினும், யாழினும் இனிய மழலை பேசும் நமது குழந்தைகளைக் கண்டு கண்எது? காது எது? மூக்கு எது? எனக் கேட்கக் கேட்க அதுவும் அந்த அந்த உறுப்புக்களைத் தம் பிஞ்சுக் கரங்களால் தொட்டுத் தொட்டுக் காட்ட நாம் நெஞ்சார்ந்து என்ஞான்றும் இன்பத்தில் திளைக்கிறோம்; அல்லவா?

அதைப்போலவே எல்லாம் வல்ல எம்பெருமான், சர்வமும் உணர்ந்த தயாபரன், அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாகிய இறைவன், பக்தி வலையிற் படுவோனாகிய பரம் பொருள், மயிலேறும் மாணிக்கம், மாதவக் கொழுந்து, கண் கண்ட தெய்வம், கலியுகத்தும் வரதன், குழந்தை வடிவேலன், குன்றுதோறுடுங் குமரன், வானவரின் குறைதீர்த்த வள்ளல், ஞான பண்டிதன் என்றெல்லாம் எண்ணற்றத் திருப்பெயர் களாலே, இவ்வையகத்தோரால் ஏத்தப்படுகின்ற, என்னுயிர்க் குயிராம் பன்னிருபுயத்தோனாகிய, என்றும் இளையோனாகிய, உதய ஞாயிறொக்கும், இதயங்கவர் கள்வனும் ஆறுமா முகப் பரஞ்சுடரும், கூறுமாப்புகழ் ஔவையின் செவ்வை மொழியான் சிலகேட்டறியப் பெரிதும் விரும்பினன் போலும்.

உடனே அடியார்க்கு எளியனாகிய அறுமுகச் செவ்வேள் ஔவையின் எதிரில் தோன்றினன். தேவரும் மூவரும் காணாத தேவதேவனை, ஆவலுடன் கண்குளிரக் கண்டாள் ஔவை. திடுக்கிட்டாள். மெய்மறந்தாள். அற்புதமாகிய ஐயன் பொற்பதத்தைக் கண்டு பூரித்தாள். விம்மித முற்று விளம்புகின்றாள்.

முருகா! முருகா! மூவர் முதல்வா! செந்தமிழ்த் திலகமே! சிவசங்கரா! தேசிகா! செங்கல்வராயா! கருணைமாக்கடலே! என்னையும் ஒரு பொருளாக எண்ணிக் காட்சிதந்த கருணை நிதியே! என்றெல்லாம் ஆராப் பெருங்காதலால், பேரானந்த முற்று மகிழ்ந்தாள்.

''சீர்கொண்ட தெய்வ வதனங்க ளாறுந்
திகழ் கடப்பந்
தார்கொண்ட பன்னிரு தோள்களுந் தாமரைத்
தாள்களும் ஓர்
கூர்கொண்ட வேலும், மயிலும் நற்கோழிக்
கொடியும் அருட்
கார்கொண்ட வண்மைத் தணிகாசலமும்என்
கண்ணுற்றதே! (திருவருட்பா)

எனக்கண்ணீர் மல்கிக் கசிந்து கைகூப்பி நின்றாள். இந்நிலை கண்டு இன்புற்ற இளையவேற் பெருமான், ''அமிழ்தினும் இனிய செந்தமிழ்க்குச் சேவையாற்றுந் தாயே! உன்னைச் சில வினாக்கள் வினவும் பொருட்டு வந்தேன். கேட்கலாமோ ?'' என்றார்.

அவ்வுரை கேட்ட ஔவை ''ஐயனே! சுட்டகனிவேண்டுமா ? சுடாதகனிவேண்டுமா ? எனக்கேட்டு இட்டமுள்ள கனியைப் பறித்து, எனக்கிட்ட அப்பனே! இதுவும் நின் திருவிளையாடலோ! தேவரீர் அறியாததும் உளவோ ? முழுதோருங்குணர்ந்த மூர்த்தியாகிய நீவிர், ஏதுமறியா என்னைக் கேட்பதா ?'' எனக்கூறிச் சோதித்து அறியும் பெருமானின் சுந்தரத் திருவடியைத் தொழுது, சொன்மலராம் தூமலரைத் தூவித் துதித்து நின்றாள். பின்னர் பேரின்ப நிலையருளும் பெருமான், பிரியத்தோடு ஔவைப் பிராட்டியினிடம் முறையே இனியது, கொடியது, அரியது, பெரியது இவைகளைக் கேட்டுப் பெரிதும் புன்னகை புரிந்து, நன்னயத்தோடு ஆசி நல்கி மறைந்தருளினர். அதனில் அரியதும் நமக்கே (மானிடப்பிறவிக்கு) உரியதுமான வானவர்நாடு வழிதிறக்கும் ஞான வகையினை ஈண்டுக்காண்போம்.

நலம்பல அருளும் நாயகன், ஆயகலைகள் யாவும் உணர்ந்த ஔவையை நோக்கி, அன்னையே! "உலகத்திலே அரியது எது? அதனை விளக்கமாகச் சொல்" என்றார். "எப்பிறப்பாயினும் ஏமாப்பொருவற்கு, மக்கட்பிறப்பிற் பிறிதில்லை (அறநெறிச்சாரம்) யாதலால்.

"அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிது அரிது மானிடராதல் அரிது"

என்று ஔவையார் கூற, எந்தையாம் கந்தவேள் அதனைக் கேட்டுத் தலையசைத்து "நல்லது". அதனினும் அரியது யாது? என்றார்.

"மானிட ராயினும் கூன், குருடு, செவிடு
பேடுநீங்கிப் பிறத்தல் அரிது".

எத்தனையோ பேர் குருடர்களாகவும், செவிடர்களாகவும், ஊமைகளாகவும், அங்கம் குறைந்தவர்களாகவும் பிறந்து அவதியுறுகின்றனர். ஆகவே அவ்வாறெல்லாம் பிறவாமல், அழகுடன் தோற்றமும், ஏற்றமும் பெற்றுப் பிறத்தலே அரியது ஆகும் என அருந்தமிழ் மூதாட்டியும் மொழிந்தனள். பின்னர் பன்னிருகைப் பரமன் பரவசமுற்று, அதைவிட அரியது உளதோ? என்று கேட்க, பெருமானே!

"பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியும் நயத்தல் அரிது".

எத்தனையோ மனிதர்கள் அழகாகவும், தனவான்களாகவும், மாடமும் கூடமும், நிலமும் நீரும் உடையராய் வாழ்கின்றார்கள். இருந்தும் என்ன? கண்போன்ற கல்வியையும், அதனால்வரும் ஞானத்தையும் எண்ணி விரும்புகின்றார்களில்லை. எண்ணரிய பிறவிதனில் புண்ணிய வசத்தால் வாய்த்த மனிதப் பிறவியைப் பெற்றவர்கள் அதன் பயனாகிய ஞானத்தைப் பெறமுயல வேண்டாமா? ஞானந்தானே அனைத்தையும் தரவல்லது என்றாள், நம் நினைவில் நின்ற ஔவை.

அங்ஙனமாயின் அம்மா! அதனினும் அரியது எது? என்றார் குமாரக் கடவுள். முருகா!

"ஞானமுங் கல்வியும் நயந்த காலையும்
தானமுந் தவமுந்தான் செயலரிது."

எல்லா வுயிர்களேயும், தன்னுயிர் போல் நேசித்து, இரங்கி அவைகளின் துன்பத்தைப் போக்கி, கல்வி ஞானத்தின் பய ணுகிய தானதருமங்கள் நிறைய ஆற்ற வேண்டும். வறி யோர்க்குச் சோறிடவேண்டும். ஆலயங்களின் திருப்பணிக்கு என்ருல், தங்களால் இயன்ற அளவு உதவி செய்தல் வேண்டும். சதா இறைவனேயே தியானித்துத் தவம் புரிதல் வேண்டும்.

''கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.' (திருக்குறள்)

என்றபடி ஞான நூல்களேக் கற்று, அந்நூல்கள் கூறும் அற வழியிலே ஊன்றி நிற்க வேண்டும். இவ்வாறு நிற்பது அரியது என அறுமுகனுர் அடிபணிந்து, ஔவை கூறினள். மேலும், பெருமானே! ஞானமுங் கல்வியும் நயந்து, மாநில மக்கள்,

''தானமுந் தவமும் தான்செய் வராயின்
வானவர் நாடு வழிதிறந்திடுமே.''

என்று கூறி முடிக்கின்ருள். இவ்வரிய உரையாடலினுல் நமக்குத் தெரிய வருவது யாதெனின், நாம் உயர்வுமிக்கப் பிறவியைப் பெற்றுள்ளோம். பிறவியைப் பெற்றதன் பயன் நல்ல நூல்களேக் கற்க வேண்டும். கற்று அதன்வழி நிற்க வேண்டும். தானங்கள் செய்ய வேண்டும். இறைவனேப் போற்றுதல் வேண்டும். மேலும் இளங்கோவடிகளாரும் ''தானஞ்செய்மின், தவம்பல தாங்குமின்'' என்ருர். நாம் இதுபோன்ற நூல்முறைகளேத்தெரிந்து ஒழுகுதல் வேண்டும். மேலும் வானவர்நாடு தானம், தவம் என்ற இரண்டு கதவு களாலும் மூடப்பட்டிருக்கிறது. நாம் ஞானமாகிய திறவு கோல் (சாவி) கொண்டு நம்முடைய சிந்தையாகிய இரும்புப் பெட்டியைத்திறந்து, ''தானமும் தவமும்'' ஆகிய உயர்வான பொருள்களே வாரி வழங்கினுல், ஆங்கே வானவர் நாட்டின் வழி திறக்கப்படும். எனவே எழுவகைப் பிறவியினுள்ளும் விழுமியதைப் பெற்ற நாம், தானத்திலும் தவத்திலும் வழு வாது நின்று ஒழுகுவோமாக.

---

# ஒருவர் என்ற உயரிய சொல்

வித்துவான் திரு தி. மு. சங்கரலிங்கம் அவர்கள்,
தமிழாசிரியர்,
திருவாமாத்தூர், விழுப்புரம்.

---

நான் மறையை வேதியர் ஓதினர்; நற்றமிழை நாவலர்கள் நயம்படப் பாடினர்; மேள தாளங்கள் முழங்கின; மணியோசை விடாது ஒலித்தது. வெடிகளின் ஓசை விண்ணைத்துளைத்தது. மண்ணில் வாழ் அரவும் அவ்வொலி கேட்டு அஞ்சி நடுங்கின; மறைபல கற்ற மாண்புறு வேதியர் திரைக்குப்பின்னிருந்து ஆண்டவனுக்கு அமுது படைத்தனர்; செஞ்சுடர் ஒளிவீசும் செம்மேனியம்மான் திருமுன் பலமணித்திரளைப் பாங்குற அமைத்த ஒளிப்பிழம்போ என அதிசயிக்கும் வண்ணம் விளங்கிய பல அடுக்குகளாலாகிய தீப வரிசையைக் காட்டத் திரைவிலகியது. "கைம்மலர் உச்சிமேற் குவித்து" அடியவர் குழாம் 'அர' வொலி செய்தது. "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி, நாதன் நாமம்" பாடி நாத்தழுதழுத்த அவ்வன்பர்கள் கூட்டம் ஆனந்தக் கூத்தாடியது.

அப்பொழுது அடியவர் குழாத் துளிருந்த ஓர் முதுபெரும் புலவர் பெருமான் ஆண்டவனின் அருளார் நிலையை "ஐந்து பேரறிவும் கண்களே கொள்ளப்" பருகிக் கண் பெற்றபயனை ஓரளவுதான் எய்தினேம்; "நாலாயிரம் கண்படைத்திலனே அந்த நான்முகனே" எனச்சிந்தித்தார். இருப்பினும் ஓரளவு மன அமைதி கொண்ட அவர் "கண்ணினுல் திருக்கயிலையிலிருந்தருள் கோலம், நண்ணி நான் தொழ நயந்தருள்புரி எனப்பணிந்தார்". மனமுருகி வாழ்த்தினர். பொன்னென மதிக்கும் மண்ணக வாழ்வை வெறுத்த அன்பர்கள் இவ்விதம் ஆண்டவனின் அருளார்ந்த காட்சி அநுதினமும் எய்துமாயின் "மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே" எனப் போற்றிப் புகழ்வதை இப்புலவர் பெருமானும் அறிந்தார். தாமும் அதனையே விழைந்தார்.

ஆண்டவனின் அருட்டிரு மேனியை உற்று – உற்று நோக்கினர். மாதொருபாகம் குடிகொண்டுள்ளதை அறிந்தார். சூரியன், சந்திரன், ஆன்மா, தீ, நீர், வளி, வெளி என்ற அட்டமூர்த்த சொரூபமாக விளங்கும் இறைவன் அம்மையப்பனாகத் தோன்றியருளும் காட்சியைக் கண்ணுற்றார். ஆண்வடிவை 'அவன்' என்றும், பெண் வடிவை 'அவள்' என்றும் கூறுவர். ஆனால் ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து விளங்கும் இறைவனைக் கண்டபுலவர் எவ்வாறு துதிப்பதென அறியாமற் சிறிது திகைத்தார். தனித்தனியே ஆணாகவும், பெண்ணாகவும் இல்லாமல் மாதொருபாகனாக – அர்த்த நாரீசுர வடிவாகத்தோன்றி யருட்காட்சியளிக்கும் ஆண்டவனைப் போற்றித் துதிக்க அவர்தம் செந்நாத் துடித்தது. ஆனால் எவ்வடிவை - எவ்வாறு துதிப்பது .... ... சிந்தித்தார்.

> "ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும்சீர்ப்
> பேசுமியல் பல்காப் பியத்தொகையும் — ஓசை
> எழுத்துமுத லாம்ஐந் திலக்கணமும் தோய்ந்து
> பழுத்த தமிழ்ப்புலமை பாலித்த . . . . . . . . ."

சிந்தனைச் சிற்பியாகிய தெய்வநலம் கொழிக்கும் அருட்புலவரல்லவா அவர்.

> "ஒருவர் என்னும் பெயர்நிலைக் கிளவி
> இருபாற்கும் உரித்தே தெரியுங் காலை"
>
> (தொல். சொல். பெயரியல் 37)

> "ஒருவர் என்பது உயரிரு பாற்றாய்
> பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப"
>
> (நன். சொல். பெயரியல் 32)

என்ற ஆன்றோர் இலக்கணச் சூத்திரங்களும்,

"இருபாற்கும் பொதுப்படக் கூறினாரேனும் ஒருவர் என்னும் ஒருமைப் பெயரால் உணர்த்தப்படுதற்கேற்பன ஒருவன் ஒருத்தி என்பனவே ஆகலான், அவையே கொள்ளப்படும்" என்ற (சேனாவரையர்) உரையாசிரியர்க் கருத்தும் தமது தெள்ளிய உள்ளத்தே தோன்றலாயின.

ஆண் பெண் இவர்களைக் குறிக்கும் பாற்பொதுமையான் அமைந்த "ஒருவர்" என்ற பொதுச்சொல்லை ஆன்றோர்

கூறியிராது போயிருப்பாரே ஆனால் இப்பொழுது மாதினைத் தம்பாகத்தே கொண்ட எம்மிறைவனை எவ்வாறு துதிப்பேன் என்று கருதி முன்னோர் வகுத்த இலக்கண அமைப்பை வியந்து பாராட்டி மகிழ்ந்தார்.

இறையருள் உள்ளிருந்து தூண்டப் புலவர் பெருமான் உள்ளத்தே பாடல் தோன்றியது. பாடிக் களித்தார். தாம் பெற்ற இலக்கண இன்பத்தை - இறையருளின்பத்தை நம்ம னோரும் படித்துணர எழுதியும் வைத்தார். இவ்வரிய நுண் மாண் நுழைபுலமிக்க புலவர் யார் என்றுதானே எண்ணு கிறீர்கள். இளமையிலே செந்திலாண்டவன் திருவருள் பெற்றுச் சைவமும், தமிழும் தழைக்கத், தொண்டாற்றிய ஞானவள்ளல் குமரகுருபர அடிகள்தான் அவர்.

இன்தமிழ் இலக்கிய, இலக்கணக் கடலாகிய அப்புலவர் பெருமான் அர்த்தநாரீசுர மூர்த்தியாகிய மாதொரு பாகனைச் சிதம்பரச் செய்யுட்கோவை நூலிற் பாடியருள்கிறார். ஏன்? நீங்களும் அப்பாடல் அறிந்து புலவர் பெருந்தகையார் இலக் கணப் புலமையைப் பாராட்ட வேண்டாமா? இதோ அவரது அருட்பாடல்.

அருவருக்கும் உலகவாழ்(வு) அடங்க நீத்தோர்க்(கு)
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்ணெனும்எண் வகையுருப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும் ஒருந்திக்கும் உருவொன் றுல்அவ்
உருவையிஃ தொருத்தன்என்கோ? ஒருத்தி என்கோ?
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்(று)ஓர்
இயற்சொல்இல தெனின்யான்மற் றென்சொல் கேனே
(சித. செய். கோவை 54)

இவ்வாறுள்ள இப்புலவர் பெருமானின் அருட்புலமை யையும், சிரிய கவி நயத்தையும் அறிந்தின்புறுவோமாக.

---

## சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு

### கோசம்வர்த்தன நந்தனவன உதவி நிதி ரூ. 8000/-



'நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய்
பூநாளும் தலைசுமப்பப் ... ... .. பெறலாமே நல்வினையே.
'கட்டலர்த்த மலர் தூவிக் கைதொழுமின்.
'பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடி,
'போதுகளும் கொய்து பூந்தார் மாலை
கண்ணி பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில் திருவிளக்கிட்டுத் திருநந்தவனமும் செய்து'

என்று இன்னோரன்னவாறு சாத்திரதோத்திரப்பாடற் பகுதிகளான திருநந்தவனம் அமைத்து இறைவற்குப் பூக்களைச் சூட்டுதலாகிய சரியைத்தொண்டு செய்தல் நன்கு விளக்கம் பெறும். 'துளக்கில் நன்மலர் தொடுத்தால் தூயவிண்ணேறலாகும்' என்பர் திருநாவுக்கரசர். அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய முருகநாயனாரும் 'கோட்டு மலரும் நிலமலரும் குளிர்நீர் மலரும் கொழுங்கொடியில் தோட்டு மலரும் 'கொணர்ந்து இறைவற்கு 'இண்டைச்சுருக்கம் தாமமுடன் இணைக்கும் வாச மாலைகளும், தண்டில் கட்டும் கண்ணிகளும், தாளில் பிணைக்கும் பிணையல்களும், நுண்தாதிறைக்கும் தொடையல்களும்' தொடுத்துத் திருவைந்தெழுத்தோதிச் சாத்தும் பணியில் தலைசிறந்தார். இங்ஙனம் நந்தவனம் அமைத்து இறைவர்க்குப் பூந்தாமம் சாத்தும் சிவபுண்ணியச் செயலை 'நாடோறும் தில்லையில் நிகழ்த்துவித்தற் பொருட்டு 4-9-1967 தேதியில் ஆவணப்பதிவுபெற்ற சிதம்பரத்தில் கோசம்வர்த்தன நந்தனவன நிதி சாஸனத்தில் கண்டவண்ணம் சிதம்பரத்தில் நந்தனவனம் வைத்துப் பராமரிக்கப் பெற்றுவருகின்றது. அப்பராமரிப்புத் தொகையுடன் மேற்கொண்டு அந்நந்தனவனத்தைப் பராமரித்தற்பொருட்டு இந்நிதி திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களால் நிறுவப் பெற்றது. இது 'சிதம்பரத்தில் ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள் நினைவு கோசம்வர்த்தன நந்தனவன உதவி நிதி' எனப்பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 8000/– ரூபா எண்ணாயிரம். இது ஆண்டொன்றுக்கு 6-1/2% வட்டி தரக்

கூடிய நிலையான முதலீடாகக் கும்பகோணம் ஸ்டேட்பாங்கில் 5 ஆண்டுகளுக்கு முதலீடு செய்யப்பெற்றுள்ளது. பிக்செட் டெபாசிட் நெ. 076585 தேதி 17-7-1968. ரூ. 8000/-. இது நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் பரி பாலிக்கப்பெற்றுவரும்.

3. நம்மால் 4-9-67 தேதியில் ஆவணப்பதிவு செய்யப் பெற்றுள்ள 'சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு கோசம்வர்த்தன நந்தனவன நிதி'யில் கண்டுள்ளவாறு சிதம் பரத்தில் ஒரு நந்தனவனம் ஏற்படுத்தப்பெற்று நம்மால் பரா மரிக்கப்பெற்றுவருகிறது. பராமரிப்புக்கு அந்த நிதியிலிருந்து செலவு செய்யும் தொகையோடு அந்த நந்தனவனத்தைப் பரா மரிப்பதற்காக இம்முதற்பொருளினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டித் தொகையில் இத்தருமத்தை நடத்து வதற்குரிய நிர்வாகச் செலவுகள் போக எஞ்சிய தொகை முழுவதும், நம்மால் தேவைக்கேற்றவாறு அவ்வப்பொழுது செலவு செய்யப்பெற்றுவரும்.

4. இவ்வட்டி வருமானம் வேறு எந்த முறையிலும் செலவு செய்யப்பெறமாட்டாது.

5. இம்முதற்பொருள் நம்பேரிலும் நமக்குப்பின் உரி மையுள்ளவர்கள்பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப்பெறும்.

'வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்துவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை அம்பலத்தே ஆடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ'

—திருவாசகம்.

Tirupanandal
Dated 18-7-1968 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered as Book No. 4 Volume No. 54 pages 299 to 300 and Vol. 55 - page 1, Document No. 32 on 20-7-1968 at the Sub-Registrar Office, Tiruvadamarudhur.

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியர் பெயர் |
|---|---|---|
| 11389 | சென்னை, இராஜா அண்ணாமலை மன்றத்தில் நடைபெற்ற தேவாரபண் ஆராய்ச்சிக் கூட்டத்தின் 17வது ஆண்டு அறிக்கை | தமிழ்இசைச்சங்கம், சென்னை. |
| 11390 | சித்திரத் திருவெம்பாவை | சித்ரலோகா வெளியீடு |
| 11391 | இராமலிங்கரும் தமிழும் | ஆசிரியர் ஊரன் அடிகள் |
| 11392 | வடலூர் வரலாறு | ஷை ஷை |
| 11393 | சித்தாந்தத் தெளிவியல் | தருமையாதீனம் |
| 11394 | தமிழ்க்கடலில் முத்துக்கள் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 11395 | தமிழ் இசைச்சங்கம் | தமிழிசை வெள்ளிவிழாச் சிறப்புமலர் |
| 11396, 97, 98, 99 & 11400 | நவதிருப்பதி மான்மியம் | உபயவேதாந்த பெரியநம்பி திருவேங்கடாசாரியார், மேலரதவீதி ஸ்ரீவைகுண்டம் |
| 11401 | தேவாரத்தலவணக்கம் | சிவனேசர் திருக்கூட்டம், காரைக்குடி |
| 11402 | புதியதும் பழையதும் | ஸ்ரீ தியாகராச விலாசவெளியீடு |
| 11403 | குமரகுருபரன் 1967 ம் ஆண்டுமலர் | |

———

(தொடரும்)

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 50 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக்கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | 0 40 |
| 3 | .. சிதம்பர மும்மணிக்கோவை ,, ... | 0 20 |
| 4 | .. மதுரைக்கலம்பகம் .. ... | 0 40 |
| 5 | .. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் .. .. | 0 60 |
| 6 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 7 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 25 |
| 8 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 9 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 10 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 11 | நீதிநெறி விளக்கம் - ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 50 |
| 12 | .. - மூலம் ... | 0 10 |
| 13 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 15 |
| 14 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 10 |
| 15 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 16 | மூவர் தேவாரம் அடங்கன்முறை - தலமுறை .. | 8 75 |
| 17* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 30 |
| 18 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் மூலம் மட்டும் ... | 0 56 |
| 19* | .. .. தெளிவுரை ... | 1 50 |
| 20* | பதினோராந் திருமுறை ... | 1 50 |
| 21* | ஒருதுறைக்கோவை ... | 1 75 |
| 22* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 36 |
| 23 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி ... | 0 25 |
| 24 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் ... | 0 50 |
| 25 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 26 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 27 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 28 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 29 | Hymns and Proverbs ... | 0 30 |
| 30 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 31 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd. No M. 5574 

| எண் | நூல் | | விலை |
|---|---|---|---|
| 32 | திருத்தொண்டர் புராணசாரம் | ... | 0 40 |
| 33 | திருவிளையாடற்புராணம் உரை நடை | ... | 2 25 |
| 34 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 75 |
| 35 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள் (மூலம்மட்டும்) | | 2 75 |
| 36 | ,, யுத்த தேவ காண்டம் | ... | 2 00 |
| 37 | ,, தக்ஷகாண்டம் | ... | 1 50 |
| 38 | கந்தபுராண உரைநடை | ... | 3 00 |
| 39 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 40 | கந்தரகலிவெண்பா சகலகலாவல்லிமாலை ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புடன் | .. | 1 25 |
| 41 | இந்து நீதி நூல்கள் | ... | 0 10 |
| 42 | நவக்கிரகமாண்பு | ... | 0 25 |
| 43 | ஸ்ரீ சயிலம் | ... | 0 10 |
| 44 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 45 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... | 0 10 |
| 46 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 47 | திருக்குறள்-பொருட்பால் .. | ... | 2 50 |
| 48 | திருக்குறள் - காமத்துப்பால் .. | ... | 1 00 |
| | ஷை 47, 48, 49 திருக்குறள் 3புத்தகமும் | .. | 4 00 |
| 49 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | | 1 00 |
| 50 | திருக்குறள் பரிமேலழகர் உரையுடன் கூடியது (முப்பாலும் சேர்ந்து) | ... | 2 25 |
| 51 | திருக்குறள்-உரைக்கொத்து-பொருட்பால் 2-ம் பதிப்பு | . | 2 75 |
| 52 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | .. | 1 25 |
| 53 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத்திரட்டும் | ... | 0 30 |
| 54 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 55 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 15 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:,

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு.
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு: * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் எண் 51, 52 தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-68.